# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

"சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 46 திருவள்ளுவர் ஆண்டு 2055, மார்ச்சு – 2024

## உள்ளே...












# மீன் வளத்துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Angler | – தூண்டில் மீன்பிடிப்பவர் |
| Asdic set | – மீனறிகருவி |
| Bisque | – மீன் சாறு |
| Bottom fish | – ஆழ்கடல் மீன் |
| Cast net | – வீச்சு வலை |
| Cork line | – தக்கை வரம்பு |
| Cured fish | – பதனிட்ட மீன் |
| Danbuoy | – அடையாள மிதவை |
| Dehydrated fish | – உலர் மீன் |
| Desiccation | – நீர் நீக்கம் |
| Dip net | – அள்ளு வலை |
| Firkin | – மீன் வெண்ணெய் |
| Fish bait | – தூண்டில் இரை |
| Fish farmer | – மீன் வளர்ப்போர் |
| Fish food | – மீன் உணவு |
| Fish market | – மீன் அங்காடி |
| Gurdy | - வலை இழுகருவி |
| Ichthyology | – மீனியல் |
| Life boat | – ஏமப் படகு |
| Line fishing | – தூண்டில் மீன் பிடிப்பு |
| Nursery | – மீன் குஞ்சு வளர்ப்பிடம் |
| Ornamental fish | – அழகு மீன் |
| Predatory fish | – கொல்லி மீன் |
| Tackle | – மீன்பிடி கருவி |
| Towing warp | – இழுவலைக் கயிறு |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2055 கும்பம் (மாசி)

மார்ச்சு – 2024



ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# சொற்குவை – வளமான தமிழ்வளர்ச்சிக்குப் பொற்குவை

அன்னைத் தமிழ், அழகார்ந்த தமிழ், தொன்மைத் தமிழ், ஞாலத் தமிழ், ஞானத் தமிழ் எனச் சொற்களுக்குள் அடங்காத செம்மாந்த, பிறமொழி பேசுவோரும் வியந்து போற்றும் நம் தாய்மொழியாம் தமிழ்மொழி எண்ணற்ற சிறப்புகளை உடையது. சான்றாக,

- தமிழ்மொழி இனிமையான மொழியாகும். எந்த மொழியிலும் இல்லாத ஒலிச் சிறப்பு தமிழ்மொழிக்கு உண்டு. "ழ" இதற்குச் சான்றாகும்.
- ஒரு மொழியியல் ஓர் எழுத்து மட்டுமே தனித்து நின்று பொருள் உணர்த்தும் சிறப்பு தமிழ்மொழிக்கு உரியது. பூ, கை, தை, வா, போ, ஆ, ஐ, கோ, ஊ, ஈ, தீ, தா, தே, நை, வீ, மா, ... இவ்வாறாக 42 ஓரெழுத்து ஒருமொழி எழுத்துகள் தமிழ்மொழியில் உள்ளன.
- இரட்டைக் கிளவி என்பது இரட்டைச் சொற்களாய்ச் சேர்ந்து நின்று வினைக்கு அடைமொழியாய்க் குறிப்புப் பொருள் உணர்த்துவது. இவற்றைப் பிரித்தால் பொருள் தராது. (எ.டு.) சலசல, மடமட, கலகல, கரகர, கமகம
- ஒருசொல் இரண்டு, மூன்று, நான்குமுறை அடுக்கிவருவது அடுக்குத் தொடர். இது இசையை நிறைவு செய்யவோ அல்லது விரைவு, வெகுளி, உவகை என உணர்வுகளைக் காட்டவோ வரும். (எ.டு.) புலிபுலி என்று கத்தினான், குவியல் குவியலாகக் கற்கள் கொட்டிக் கிடந்தன, சாரைசாரையாக எறும்புகள் ஊர்ந்துசென்றன, வேகவேகமாக ஓடினான்
- ஒருசொல் அடுக்கிவந்து மட்டுமல்ல தனிச்சொல்லாக நின்றாலும் பொருள் உணர்த்தும்.
- உவமை, உவமேயம், பிறிதுமொழிதல், சொற்பொருள் பின்வரு நிலையணி, எடுத்துக்காட்டணி என அணியிலக்கணம் கூறும் மொழியாகத் தமிழ்மொழி சிறப்புப்பெற்று விளங்குகிறது.

இப்படித் தோன்றி எழும்போதே ஆற்றலும் அரவணைப்பும் கொண்டு தோன்றிய மொழி நம் அன்னைத் தமிழ்மொழி. அதன் சிறப்புகளுக்கெல்லாம் மணிமுடியாக அமைவது அதன் சொல்வளம் ஆகும்.

### குவை – குவியலாகும்

ஒருமொழியை இறந்துபடாமல் ஆண்டாண்டுக் காலம் வாழச்செய்வன அதன் கலைச்சொற்கள் ஆகும். "குவை" என்பதற்குத் திரள், தொகுதி, திரட்சி, குவியல் எனப் பல பொருள்கள் உண்டு.

"வேனில் பாதிரி விரிமலர் குவைஇ" (ஐங். 36)

"குவளை நாறும் குவை இரும் கூந்தல்" (குறு. 300)

"தன் மலை பிறந்த தாஇல் நன்பொன்

பல் மணி குவையொடும் விரைஇ கொண்ம்என" (புறம். 152)

அதுபோல், ஒருபொருட் பன்மொழியும். இதைத்தான் நன்னூல் மீமிசை என்கிறது. பொழில், பொதும்பர், கா என்ற சொற்கள் மூன்றும் சோலை என்னும் ஒரு பொருளைக் குறிப்பதாகும்.

வீடு – இல்லம், உறையுள், மனை

இன்பம் – மகிழ்ச்சி, உவகை, களிப்பு

அழகு – அணி, வடிவு, வனப்பு, எழில், கவின்

துயில் – துஞ்சல், உறக்கம், தூக்கம்

நிலா – மதி, திங்கள், அம்புலி

ஒருசொல் பல பொருளையோ (அ) கருத்தையோ தருவதும் மொழியின் தேர்ந்த மேம்பட்ட நிலையையே காட்டுகிறது. இது பல பொருள் ஒருமொழி எனப்படும். சான்றாக,

ஆறு – எண், நதி, வழி, ஒழுக்கம்

வாரணம் – யானை, சேவல், சங்கு

விடை – மறுமொழி (பதில்), எருது

மா – மாமரம், குதிரை, பெரிய, விலங்கு

ஒரு பயிரியை (தாவரத்தை) எடுத்துக்கொண்டால்கூட அதன் அடிப்பகுதி எனும் போது தாள், தண்டு, கோல், தூரு, தட்டு, கழி, கழை, அடி எனவும்,

அதன் பக்கக் கிளைகளைக் கவை, கொம்பு, கொப்பு, கிளை, சினை, போத்து, குச்சி, இணுக்கு எனவும்,

காய்ந்த அதன் பகுதிகள் சுள்ளி,

கட்டை, விறகு, வெங்கழி எனவும்

அதன் பிஞ்சு வகைகளுக்குப் பூம்பிஞ்சு, பிஞ்சு, வடு, மூசு, கவ்வை, குரும்பை, இளநீர், நுழாய், கருக்கல், கச்சல் எனவும்,

அதன் குலைகளைக் கொத்து, குலை, தாறு, கதிர், அலகு, குரல், சீப்பு எனவும் பாகுபடுத்தி சொல்வளம் கொண்ட மொழி நம் அன்னைமொழி.

தமிழ்மொழி ஒரு திறவி போன்றது. அதைக் கொண்டு உலகம் எனும் பெரும் பூட்டைத் திறக்கலாம். தமிழ் மலை போன்றது. ஏறுவதற்குச் சற்றே கடினம் என்றாலும் உச்சியை அடைந்துவிட்டால் புதிய உலகை நாம் காணலாம்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" என்றார் உலக மகாகவி பாரதியார். மேலும், "சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே" என்றார். "தமிழுக்கும் அமுதென்று பேர்" என்றார் பாவேந்தர் பாரதிதாசன். அறுபடாத இலக்கிய மரபோடு நீண்ட காலமாகத் தொடர்ந்து வரும் நம் தாய்மொழியாம் தமிழ்மொழியின் சிறப்புக்குக் காலந்தோறும், துறைதோறும் தொடர் பெருமை சேர்ப்பது கலைச்சொற்களாகும்.

இனிமை, இளமை கொண்ட மொழி தமிழ்மொழி. அமிழ்து அமிழ்து எனத் தொடர்ந்து ஒலிக்கும்போது அது தமிழ்தமிழ் என்றே கேட்கும். அமிழ்தே தமிழாதலால் இன்றும் அது கன்னித் தமிழாய் இறவாப் பெரும்புகழ்பெற்று மிளிர்கிறது.

சான்றுக்குச் சொல்லப்போனால், நானூறு ஆண்டுகளுக்கு முன் சேக்சுபியர் எழுதிய ஆங்கில நாடகங்களை வாசித்து விளங்கிக் கொள்ள முடியாத நிலையில் இன்றைய ஆங்கிலம் உள்ளது. ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தொல்காப்பியர் எழுதிய தமிழைப் புலம்பெயர் தமிழ் மக்கள்கூட வாசித்துப் பொருள் அறிந்துகொள்ளலாம். இதுதான் தமிழ்மொழி, இதுதான் அதன் சிறப்பு. மொழி வளர, வாழ, நம்மை வாழ்விக்க காலந்தோறும் கலைச்சொல்லாக்கப் பணியை விடாமல் தொடர்தல் வேண்டும். தமிழ்மொழியின் சொல்வளத்துக்கு மேலும் வலுசேர்க்கும் அந்த ஆக்கப் பணியைத்தான் அகரமுதலி இயக்ககம் இடையறாது செய்துவருகிறது. இவ்வியக்ககத் தமிழ்க்கலைக்கழகத்தின் வாயிலாக வடிவமைக்கப்படும் தமிழ்க் கலைச்சொற்கள், துறைவாரியான வல்லுநர்குழுக் கூட்டங்களில் பெறப்படும் கலைச்சொற்கள், இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் வழியே கிடைக்கும் கலைச்சொற்கள் எனப் பல்வேறு வழிகளில் தமிழ்க் கலைச்சொற்கள் பெறப்பட்டு, சீராய்வுக்குப் பின் சொற்குவை வலைத்தளம் வழியாக உலக மக்களின் பயன்பாட்டுக்கு வழங்கப்பட்டுவருகின்றன.

29.02.2024 ஆம் நாள் வரை "சொற்குவை" வலைத்தளத்தில் 15,27,982 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. சொல்வளம் நிறைந்த தமிழ்மொழியின் வளர்ச்சிக்குச் சொற்குவை ஒரு பொற்குவை போன்று அமைந்து பயன்நல்குகிறது என்பதைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்கறியும். நிற்க,

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

நினைவில் வாழும் தமிழ்ப் பண்பாட்டு ஆய்வறிஞர் பேரா. முனைவர் தொ. பரமசிவன் அவர்களின், "நிகண்டு" என்ற கட்டுரையும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "முகக் கவரி ஏன்?" என்ற கட்டுரையும், தொல்காப்பியர் தமிழ்ச் சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகன் அவர்களின் "ஆய்தம் – தனிநிலை ஏன்?" என்ற கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின், "விழிப்பு" என்னும் கட்டுரையும், புதுச்சேரி அரசினர் ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்த முனைவர் ப. கொழந்தசாமி அவர்களின், "பாத்தி" என்னும் கட்டுரையும், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன் அவர்களின், "எள் – நெய்" என்ற கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# நிகண்டு

பேரா. முனைவர் தொ. பரமசிவன்
தமிழ்ப் பண்பாட்டு ஆய்வறிஞர்



'எதற்கெடுத்தாலும் தொல்காப்பியமா?' என்று என்னதான் 'நவீனர்கள்' முகம் சுழித்தாலும் தொல்காப்பியத்தி லிருந்துதான் தொடங்க வேண்டியிருக்கிறது. நிகண்டு என்ற சொல்லும் அதற்குரிய பொருளும் இன்றைய தமிழ் ஆய்வாளர்கள் பெரும்பாலோருக்குத் தெரியாது. தமிழர்களின் மரபுவழி அறிவுத் தொகுதி எங்கே கிடக்கிறது என்னும் ஞானமும் கவலையும் இவர்களுக்குத் தேவை யில்லை. ஆனால் சமூக அக்கறையுள்ள ஆய்வாளர்களுக்கு இது அடிப்படைத் தேவையாகும்.

நிகண்டு என்னும் சொல் தமிழ்ச் சொல்லாகத் தோன்றவில்லை. அது தமிழ்ச் சொல்தான் என்று நிறுவுவதற்குச் சுந்தர சண்முகனார் போன்றோர் பெருமுயற்சி செய்துள்ளனர். நம்முடைய பார்வையில் அந்த முயற்சி தேவையில்லாதது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் 'உரியியல்' என்று ஓர் இயல் உள்ளது. இந்த இயலே தமிழ் அகராதியின் மூலம் என்று கிரகோரி ஜேம்ஸ் (Gregory James) என்ற அமெரிக்கர் 'தமிழ் அகராதிகளின் வரலாறு' (History of Tamil Dictionaries) என்ற தன் நூலில் எழுதுகின்றார்.

உரிச்சொல் கிளவி அல்லது உரிச்சொல் பனுவல் என்பது பிங்கல, கயாதர நிகண்டுகளிலும் காணப்படும் பழைய பெயராகும். நன்னூல் உரையில் 'உரிச்சொல் பனுவல்' என்ற தொடரே காணப்படுகிறது. 'காங்கேயன் உரிச்சொல்' என்பதே 16ஆம் நூற்றாண்டில் பிறந்த ஒரு நூலின் பெயராகும். எனவே இரண்டு நூல்களின் பழைய பெயர் உரிச்சொல் (அ) உரிச்சொல் பனுவல் என்று தெரிகிறது.

தொலைக்காட்சியிலே வியக்கத்தகுந்த காட்சி ஒன்றைப் பார்த்த குழந்தை, கண்களை அகல விரித்து 'ஐ' என ஒலி எழுப்புகிறது.

இந்த ஒலியின் பொருளை எழுத்திலக்கியங்களில் விளக்க முடியாது. "ஐ வியப்பு ஆகும்" என்று தொல்காப்பியர்தான் இதன் பொருளைத் தமது உரியியலில் விளக்குகின்றார். வெள்ளரிக்காயின் மிகச்சிறிய பிஞ்சினை "தவப்பிஞ்சு" என்று வீட்டுப் பெண்கள் கூறுவார்கள். 'தவ' என்பது உரிச்சொல். அண்மைக்காலமாகப் பேச்சுத் தமிழில் புழங்கிவரும் சூப்பர், தூள் என்னும் பண்பு அடைச்சொற்கள் எல்லாம் உரிச்சொற்களாகவே கருதப்பட வேண்டும்.

தொல்தமிழ் இலக்கணமரபு அந்த அளவு நெகிழ்வுடையது. இப்பொழுது ஒன்று புரிகிறது. அதாவது மக்கள் மொழியின் உயிர்ப்பினையும் ஆற்றலையும் அறிய விரும்புகிறவர்கள் எல்லாம் தம் தேடலைத் தொல்காப்பியத்தின் உரியியலிருந்துதான் தொடங்க வேண்டும். 70, 80 ஆண்டுகளுக்கு முன்னர் வித்துவான் படிப்பில் நிகண்டுகள் சேர்க்கப்பட்டிருந்தன. பின்னர், அது கைவிடப்பட்டபோது. அகராதியியல் அறிவே தமிழர்களுக்குக் கிடைக்காமல் போயிற்று. பிற்காலத்தில் வையாபுரிப்பிள்ளை. மு.அருணாசலம், சுந்தர சண்முகனார், வ.ஜெயதேவன் ஆகியோர் நிகண்டுகளைப்பற்றிக் கட்டுரைகளும் நூல்களும் எழுதியுள்ளனர். தமிழில் இதுவரை 35 நிகண்டு நூல்கள் நமக்குக் கிடைத்துள்ளன.

இவற்றோடு 20ஆம் நூற்றாண்டிலும் 'நவமணிக்காரிகை' என்ற பெயரில் சோழவந்தான் அரசஞ்சண்முகனார் ஒரு நிகண்டு நூல் செய்துள்ளார். தமிழ் நிகண்டு நூல்கள் பொதுவாக, 12 தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இவற்றுள் 12ஆவது தொகுதி தொகைப்பெயர்ப் பிரிவாகும். அதாவது தொகைச்சொற்களைப் பட்டியலிடுகின்றது. எடுத்துக்காட்டாக, காலம் மூன்று, பொறிகள் ஐந்து, அரசு உறுப்புகள் ஆறு, சிற்பத் தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள்கள் பத்து, அலங்காரம் இருபத்தெட்டு என்ற வகையில் இது அமைகின்றது. பதினொன்றாம் தொகுதி ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதியாகும். ஒரு சொல்லுக்குரிய எல்லாப் பொருளையும் கூறும். இதுவே அகராதிகளின் மூலவடிவமாகும்.

ஏனைய பதினோரு தொகுதிகளும் கருத்துக்குச் சொல் தருவனவாகும். அதாவது ஆங்கிலத்தில் Thesaurus தெசாரஸ் எனப்படும் நூல் வகையைச் சேர்ந்தவை. இவை முறையே தெய்வப்பெயர்த் தொகுதி, மக்கள் பெயர்த் தொகுதி, விலங்கினப் பெயர்த் தொகுதி, மரப்பெயர்த் தொகுதி. இடப்பெயர்த் தொகுதி, செயற்கைவடிவப் பெயர்த் தொகுதி, பண்புப்பெயர்த் தொகுதி, செயல் பற்றிய பெயர்த்தொகுதி, ஒலி பற்றிய பெயர்த்தொகுதி என்றவாறு அமைகின்றன.

ஆங்கில மொழிகளில் Thesaurus என்னும் கருத்து விளக்கச் சொல் தொகுதி முதன்முதலாக 1752இல் Rogets என்பவரால் செய்யப்பட்டது. தமிழில் தொன்மையான நிகண்டு நூல்களான திவாகரமும் பிங்கல நிகண்டும் முறையே 9ஆம் 10ஆம் சிற்றாண்டுகளில் செய்யப்பட்டன. எனவே கருத்துக்குச் சொல் தேடும் முயற்சி தமிழர்களின் பழைய வழக்கம் என்று தெரிகிறது.

அறியப்பட்ட எழுத்திலக்கியங்களைவிட நிகண்டு நூல்கள் காட்டும் தமிழ் அறிவுலகம் மிகமிகப் பெரியதாகும். 10 வகையான பெயர்த்தொகுதிகளில் அவை மேலோர் வாழ்நிலைகளைவிட எளிய மக்களின் வாழ்க்கையிலிருந்து நிறைய செய்திகளை எடுத்துக்காட்டுகின்றன. அத்துடன் ஆய்வாளர்களுக்கு இன்றளவுமான பேச்சுத்தமிழ் மொழியினைப் புரிந்து கொள்ள, அவை தவிர உதவி செய்யக்கூடிய இலக்கியக் கருவிகள் வேறு எவையுமில்லை. இந்நிகண்டு நூல்கள் சமய எல்லைகளைத் தாண்டியனவாகவும் அமைகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

ஒவ்வொரு தொகுதிகளிலிருந்தும் சில எடுத்துக்காட்டுகளைக் காணலாம். நிகண்டுகளைப் பற்றிய புரிதலுக்கு இவை உதவும். இந்த எடுத்துக்காட்டுகள் திவாகரத்திலிருந்து மட்டும் இங்கே காட்டப்படுகின்றன.

தெய்வப் பெயர்களில் சிவன், திருமாலாகிய கடவுள்களோடு சமண சமயம் சார்ந்து அருகனுக்கு நாற்பத்து மூன்று பெயர்களையும், அடித்தள மக்களின் வழிபடு தெய்வமான காடுகாளுக்கு ஏழு பெயர்களையும் காளிக்குப் பதினான்கு பெயர்களையும் பகவதிக்கு இருபத்திரண்டு பெயர்களையும் திவாகரத்தில் காணலாம். நெருப்புக்கு 21 பெயர்கள். இரண்டாவதான மக்கட்பெயர்த் தொகுதியில் துறவிகள், அறிஞர்கள், அரசர்கள், பரிவாரங்கள் ஆகிய பெயர்களோடு மருத்துவர், குயவர், உப்பு விற்போர். சித்திரக்காரர் ஆகியோர்தம் பெயர்களையும் ஊன் வினைஞர், தோல் வினைஞர், கள் வினைஞர், பாணர், கழைக்கூத்தர். தமிழ்க்கூத்தர், வெறியாடுவோன், தேவராளன்கூத்தர் ஆகியோரின் பெயர்களையும் திவாகரம் பட்டியலிடுகின்றது. இதனால் நமது எழுத்திலக்கியங்களில் பெருமளவு விலக்கப்பட்டோர் நிகண்டு நூல்களால் மதிக்கப்படுகின்றனர் என்பதை உணரலாம்.

ஏடாவும் ஏடியும் தோழியும் முன்னிலைப் பெயர்களாகின்றன. இவற்றோடு உடலுறுப்புகளின் பெயர்களும் விலங்கினப் பெயர்த்தொகுதியில் விலங்குகளின் வகைகளுள் அவற்றின் இளமைப் பெயர்களும் தரப்படுகின்றன. ஆட்டின் பொதுப்பெயர்களைக் கூறிவிட்டு, துருவாடு, வெள்ளாடு, வரையாடு என

வகைமைப் பெயர்களையும் அடுக்கிச் சொல்லும் நிகண்டு நூல்களில் அடுத்ததாக, குட்டிவகைப் பெயர்களையும் காணுகின்றோம்.

பறவைகளின் வகைகளைப் பேசியபிறகு மயிலின் பெயரோடு மயிற் பீலியன் பெயர், மயில் இறகு முடியின் பெயர், மயில் சிகைகளின் பெயர்களைக் கூறி, மிக நுணுக்கமாக நத்தை, நண்டு, கரையான், புழு ஆகிய பெயர்களும் பட்டியலிடப்படுகின்றன. நாலாவது மரப்பெயர்த்தொகுதியில் 79 மரங்களின் பெயர்கள் பேசப்படுகின்றன. பூமாலையின் வகைகளாக மட்டும் 27 குறிக்கப்படுகின்றன. ஐந்தாவதான இடப்பெயர்த் தொகுதியில் ஊரைக் குறிக்க 27 பெயர்கள்.

அவற்றில் ஒரு நூற்பா "கல்வியூரி, கல்லூரியாகும்" என்கிறது. ஆறாவதான பல்பொருள் பெயர்த்தொகுதியில் உலோகங்கள். மணிகள், அலங்காரப் பொருள்கள் பட்டியலிடப்படுகின்றன. சோறு என்பதனை உணர்த்த 24 சொற்களும், கள்ளுக்கு 48 சொற்களும் காட்டப்பட்டுள்ளன. தமிழர்கள் மதுவை ஒழுக்கக் கோட்பாடு சார்த்திக் காணவில்லை என்பதற்கு இது சான்றாகும். தமிழில் சிற்றுண்டி என்ற சொல் முதன்முதலாக இத்தொகுதியில்தான் காணப்படுகின்றது.

பூரிகம் (பூரி). தோசை ஆகியவை அப்ப வகை உணவுகளாகும் எனத் திவாகரம் கூறுவதும், சமகால இலக்கியங்களில் இச்சொற்கள் காணப்படவில்லை என்பதும் சிந்திக்கத்தகுந்ததாகும்.

ஏழாவதான செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி, ஆயுதங்களின் வடிவப் பெயர்களை முதலில் பேசுகின்றது கழுமரத்தின் பெயரைக் கழுமுள் என்று சொல்வதிலிருந்து இப்பொழுது வழிபடு பொருள்களாகத் தமிழ்நாட்டில் காணப்படும் கழுமரங்களின் வடிவத்தினை அறியமுடிகிறது. பின்னர் பெண்களின் அணிகலன்களைப் பேசிவிட்டு, இசைக் கருவிகளின் உறுப்புகளின் பெயர்களையும் நுட்பமாக அறியத் தருகின்றது. வீட்டில் பயன்படுத்தப்பெறும் பொருள்களான பாய், விளக்கு, நாழி, குடை, உரல் என்பவற்றோடு விளக்குமாறு, தலைச்சும்மாடு ஆகிய பெயர்களையும் இப்பகுதி பட்டியலிடுகின்றது.

பண்புபற்றிய பெயர்த்தொகுதி, எட்டாவதாக மனிதவியல் அறிஞர்க்கும் அழகியல் குறித்துப் பேசுவோருக்கும் பொறிகளின் நுகர்வுபந்தம் சிலைச்சொற்கள் இப்பகுதிகளில் நிறையவே இடம்பெற்றிருக்கின்றன. ஒன்பதாவதான செயல்பற்றிய பெயர்த்தொகுதி மனித உடலின் எல்லா அசைவுகளுக்குமான சொற்களைப் பட்டியலிடுகின்றது.

பத்தாவதாக அமைவது ஒலிபற்றிய பெயர்த்தொகுதி. இதில் இசைத்துறைச் சார்ந்த கலைச்சொற்கள் நூற்றுக்கணக்கில் இடம்பெற்றுள்ளன. இத்தொகுதி எழுத்தில்லாத ஓசைப் பெயர்களையும் பட்டியலிட்டுக் காட்டுகின்றது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.'ஒரு சொல் பல்பொருள்' பெயர்த்தொகுதி என்பது, பதினொன்றாவது. இது தமிழ் மரபுக் கவிதையினைப் புரிந்துகொள்வதற்குத் துணை செய்வதாகும்.

இவ்வகையில் திவாகர நிகண்டு 9,500 சொற்களைப் பதிவு செய்து வைத்துள்ளது. பிங்கல நிகண்டு 14,700 சொற்களையும் குடாமணி நிகண்டு 11,000 சொற்களையும் பதிவு செய்து வைத் துள்ளன. நிகண்டுகளின் பெருமை யெல்லாம் அவை பெரும் பாலான தமிழ் எழுத்திலக்கியங்கள்போல மேலோர் மரபு மட்டும் சார்ந்தவையல்ல என்பதே. அவைதிக மரபுகளைத் தேடத் தொடங்கிய அயோத்திதாச பண்டிதருக்கு, நிகண்டு நூல்களின் அருமை புரிந்தது. அதனால்தான் அவர் தம் ஆய்வுநூல்களில் அடிக்கடி மேற்கோள்காட்டுகிறார்.

நன்றி : தொ.ப. ஆய்வுலகம்

# முகக் கவரி ஏன் ?


திரு. இரா. திருமாவளவன்

தேசியத் தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம்

மலேசியா




புதிய இயல்பில் புதிய நெறிமத்தில் முகக் கவரி அணிவது இக்காலக் கட்டத்தில் வழமையாகிவிட்டது. முன்பு ஓரிருவரால் அணியப்பட்ட முகக் கவரி இன்று பலராலும் அணியப்படும் பொருளாகி விட்டது. முகக் கவரி உருவாக்குநர்க்குப் பெருமகிழ்ச்சியே.

கோறனி நச்சில் பெருந்தொற்றினால் உலகமே அதிர்ந்த வேளையில் அது தொடர்பான கலைச்சொற்களைக் கண்டறிவதிலும் விளக்குவதிலும் நாம் பெரிதும் ஈடுபட்டிருந்தோம்.

நம் முயல்வால் கோறனி நச்சில் தொடர்பான சொற்களைத் தேடிக்கொண்டிருந்த பலருக்கும் பெரும்பயனாய் இருந்தது எனலாம். தமிழகத்தின் மொழிபெயர்ப்புத் துறையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் துறையும் நம் சொல்லாக்கங்களை வரவேற்றுப் பாராட்டியது குறிப்பிடத்தக்கது.

இத்தகு சொல்லாக்கங்களை வரவேற்றார் பலரும் இருக்க புறக்கணித்தாரும் மறுத்தலித்தாரும் உண்டு. கூடுதலாகச் சென்று இழித்தும் பழித்தும் பேசியவரும் எழுதியவரும் உண்டு.

எப்படி இருப்பினும் ஆக்கப்பணிகள் காலத்தால் நிலைப்பன என்பது உறுதியானது. நாம் செய்வது கண்ணை மூடிக்கொண்ட சொல்லாக்கம் அன்று. "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" எனும் தொல்காப்பிய கருத்தியலை உணர்ந்தும் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களின் வேர்ச்சொல் அறிவைப் பெற்றுமே சொல்லாக்கம் செய்கின்றோம்.

சொல்லாக்கம் புரிவோர்க்கு வேர்ச்சொல் அறிவு மிக மிக இன்றியமையாதது என்பார் பாவாணர். சொல்லின் மெய்ப்பொருளைப் புரிவதற்கும் வேர்ச்சொல் அறிவு இன்றியமையாததாகும்.

இவ்வறிவு இன்மையால் புதுப்புது சொல்லாக்கங்கள் தமிழ் மரபறிந்து செய்யப்பெறாமல் கிடக்கின்றன. மரபறிந்து வேரறிந்து செய்தாலும் நுட்பமான சொற்பொருள் அறியும் திறம் இல்லாதவராய்ச் சிலர் கிடக்கின்றனர்.

Face mask என்பதற்குச் சொல்லொன்றை ஆக்கஞ் செய்ய நான் முனைகையில் இரண்டு கருப்பொருள் அச்சொல்லுக்குள் இருக்க வேண்டும் என்று கருதினேன். ஒன்று பொதுப்பொருளாய் முகத்தைச் சுட்டி நேர்ப்பொருளாய் மாசினைத் தடுத்து நுரையீரலைக் காக்கும் காப்புப் பொருளாய் இருக்க வேண்டும் என்பது. மற்றொன்று ஈர்ப்புப் பொருளும் இருத்தல் வேண்டும் என்பதாகும்.

தமிழிலுள்ள அனைத்துச் சொற்களும் அடிப்படையான நெறிகளின் வழியேதான் உருவாகியிருக்கின்றன என்பதைப் பாவாணரின் வேர்ச்சொல் ஆய்வு நெறிமுறைகளைப் படிக்கின்ற பொழுது தெரிந்து கொள்ளலாம்.

ஒவ்வொரு சொல்லும் எப்பொருளில் எந்த அடிமூலத்தில் வித்தினின்றும் வேரினின்றும் கிளையினின்றும் உருவாகியது என்பதை வேர்ச்சொல் ஆய்வு விளக்கம் தெளிவுறுத்தும். இதை அறியவில்லையானால் மேம்போக்கான பார்வையில் அறியமுடியாமல் புறக்கணித்து விடும் நிலை ஏற்படலாம்.

ஆங்கிலத்தில் ,

Face mask

Facial mask

Face shield

எனுஞ் சொற்கள் வெவ்வேறு பொருளில் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றுக்கு முறையே முகக் கவரி ( face mask) என்றும் , முகக் கவரிழை என்றும் ( facial mask) , முகக் கவசம் அல்லது முகக் கேடயம் (face shield )

என்றும் நாம் அழைப்பதே சிறப்பு.

இவற்றுள் கவரி எனுஞ் சொல் பழஞ்சொல்லாயினும் இக்கால் முகத்தைப் பாதி அளவு மூடி காக்கும் மூடி எனும் பொருளில் எம்மால் ஆக்கம் செய்யப்பட்டபது.

இச்சொல்லுக்கான வேர்ச்சொல் விளக்கத்தை ஆராய்ந்து அறிவதன் வாயிலாக இச்சொல் பொருத்தப்பாட்டை நாம் அறிந்து கொள்ள முடியும்.

ஆ >> வாயை ஆவெனத் திறந்து எழுப்பும் ஒலி. இது சேய்மைச் சுட்டுமாகும். பிளந்த வாயை மூடி ஒன்றைப் பற்றினால் அவ் எனப் பிறக்கும். அவ் > அவ்வு எனுஞ் சொல்லாகி வாயால் பற்றுதலைக் குறிக்கும்.

அவ்வு > அவா,

அவ்வு > ஆவு > ஆவல்

எனச் சொல்லாக்கம் பெற்று உணர்வுப் பற்றினைக் குறிக்கும்.

அவ்வு > க் சேரும் வேளை கவ்வு என்றாகும். வ் சேரும் வேளை வவ்வு எனவாகும்.

நாய் எலும்புத் துண்டை அவ்வியது.

நாய் எலும்புத் துண்டைக் கவ்வியது

நாய் எலும்புத் துண்டை வவ்வியது

அவ்வல், கவ்வல், வவ்வல் அனைத்தும் பற்றல் பொருளே..

கவ்வு> கவு> காவு = பற்றித்தூக்கு

காவுதல் = பற்றித்தூக்குதல்

காவுதல் = பற்றுதலால் காத்தல்

காவு > கா = காத்தல்

கா> காப்பு = பற்றுதலால் செய்யும் பாதுகாப்பு

கவ்வு = பற்றி மூடுதல்

கவ்வு> கவர்> கவரி = பற்றி மூடிக் காக்கும் காப்பு, மாவின் உடலில் பற்றி மூடிக் காப்பாய் விளங்கும் மயிர்க்கற்றை.

கவ்வல் > பற்றுதல்

கவ்வல் > கவல் > கவர் = பற்றி ஈர்த்தல்

கவர்> கவர்ச்சி = ஈர்ப்பு

பெண் பிள்ளைகள் கவர்ச்சி நிமித்தமாய் முகத்தில் மூடி ஒட்டிக் கொள்ளும் facial mask பேசியல் மாசுக்கை முகக் கவரிழை எனக் கூறலாம். இங்கே கவர் எனுஞ் சொல் பற்றுதலையும் கவர்ச்சியையும் குறிக்கும்.

அவ்வு தொடர்பாக மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அருந்தமிழ்ச் சான்றுகளைப் பார்ப்பது சிறப்புடைத்து.

அவ்வு – வவ்வு – கவ்வு. இவை முறையே, ஔவு, வௌவு, கௌவு என்றும் எழுதப்படும்.

"அகரத் திம்பர் வகரப் புள்ளியும்

ஔஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்."

அவ்வு (ஔவு)தல் = வாயாற் பற்றுதல். கன்று புல்லை அவ்வி (ஔவி)த் தின்கிறது என்பது வழக்கு.

அவ் – அவ– அவா = வாயினாற் பற்றுதல்போல் மனத்தினாற் பற்றும் ஆசை.

அவ – அவவு – அவாவு. அவாவுதல் = ஆசைப்படுதல்.

அவாவு – ஆவு. ஆவுதல் = ஆசைப்படுதல். ஆவு – ஆவல். ஆர்வத்தோ டணைத்தலை ஆவிசேர்ந்து கட்டுதல் என்பர்.

வவ்வுதல் = வாய்ப்பற்றுதல்போற் கைப்பற்றுதல், பறித்தல். வவ்வு – வாவு – வாவல் = பெருவிருப்பம்.

கவ்வுதல் = வாயாற் பற்றுதல்.

கவ் – கவ – கவர். கவர்தல் = பற்றுதல், விரும்புதல்.

"கவர்வு விருப்பாகும்"
(தொல். உரி. 64)

கவ – கா – காதல். கா – காம் – காமம் – காமர்.

காம் + உறு = காமுறு. காமம் – காமன்.

கவ்வுதல் = கவ்வித்தின்னுதல். தின்னுதல்.

கவ்வு – கப்பு. கப்புதல் = கவளங்கவளமாக விழுங்குதல்.

கவ்வு – கவளம் = ஒரு முறை கவ்வும் அல்லது தின்னும் அளவான உணவு.

கவ்வு – கவியம் – கவிகம் = கறுழ் (bit)

கவ – கவவு = கவ்வுதல், கவ்வினாற்போல் அணைத்தல், அகப் படுத்தல், அகத்திடுதல்.

"கவவகத் திடுதல்" (தொல். உரி. 59)

கவவுக்கை = அணைத்த கை.

கவர்தல் = பற்றுதல், அகப்படுத்துதல், வசப்படுத்துதல். கவர் – கவர்ச்சி. கவ்வு – கப்பு = கவர்ச்சி.

கவர்தல் = பற்றுதல், பறித்தல். கவாஅன் = கவருங் கள்வன்.

கவர் – கவறு = கவருஞ் சூதாட்டு, சூதாடு கருவி.

கவ்வு – கவுசனை – கவிசனை = அகத்திடும் உறை.

கவ்வு – கப்பு. கப்புதல் = அகத்திடுதல், மூடுதல்.

கவ – கவை. கவைத்தல் = அகத்திடுதல், இரு கையாலும் அணைத்தல்.

கவ்வு – (கவள்) – கவளி = கவ்வினாற்போல் மேலும் கீழும் சட்டம் வைத்துக் கட்டும் பொத்தகக்கட்டு, கட்டு, வெற்றிலைக் கட்டு. கவளி – கவளிகை.

கவ்வு – கவுள் = கவ்வும் அலகு, கன்னம், உள்வாய், மேல்வாய் கீழ்வாயலகுகள் கவ்வுங் குறடு போலிருத்தலால், அலகு கொடிறு எனப்படுதல் காண்க. (கொடிறு = குறடு).

கவ – கவை = கவ்வும் அலகு போன்ற கவட்டை, கிளை. கவ – கவவு = கவட்டை. கவர்தல் = கவ்வும் அலகுபோற் பிரிதல். கவர் = பிரிவு. கவை, கிளை. கவராசம் = இரு கவருள்ள கருவி(divider). கவ்வு – கப்பு = கிளை.

(கவள்) – கவடு = கவை போன்ற தொடைச்சந்து, கவர், கவட்டை, கிளை. கவடு – கவட்டி = கவை, தொடைச்சந்து, கவடு – கவட்டை = கவை, பிரிவு, கிளை, சுண்டுவில்.

(கவள்) – கவண் = கவட்டை போன்ற கயிற்றுக்கருவி. கவண் – கவணை. கவண் – கவண்டு – கவண்டி.

கவணை கவண்டு கவண்டி என்னும் மூன்றும் கவண் என்பதன் மறுவடிவங்களே.

கவ – கவான் = தொடைச்சந்து, தொடை, தொடைச்சந்துபோல் இரு மலைக்குவடுகள் பொருந்தியிருக்கும் இடம்

கவ – கவல். கவலுதல் = பல கவர்படுதல். பல கவர்படுதல் போலப் பல நினைவுகொண்டு கலங்குதல். கவல் – கவலை = கவை, கிளை, கவர்த்த வழி, பல நினைவுக்கலக்கம், அக்கறை.

கவல் – கவலி. கவலித்தல் = கவலைப்படுதல்.

கவ் – கவ்வை = கவலை, கவலைப்பட்டுச் செய்யுங் காரியம், காரியம், வேலை. கவ் – கவை = காரியம். ஒரு காரியத்திற்கும் பயன்படாதவனைக் கவைக்குதவாதவன் என்பர்.

கவலி – கவனி. கவனித்தல் = கவலையோடு (கருத்தோடு) பார்த்தல். கவனி – கவனம்

முதற்றாய்மொழி எனும் அருந்தமிழ் நூலில் பாவாணர் காட்டும் விளக்கமே மேற்குறித்த விளக்கமாகும்.

இனி ஆங்கிலத்தில் வரும் cover எனுஞ் சொல் கப்பு > கப்புதல் எனும் முற்றிலும் மூடிக் காக்கும் காப்புப் பொருளைத் தருவதாகும். இதுவும் தமிழின் கவ்வு எனின் சொல்லின் திரிபே.

From Middle English coveren, borrowed from Old French covrir, cueuvrir (modern French couvrir), from Late Latin coperire, from Latin cooperiō ("I cover completely"), from co– (intensive prefix) + operiō ("I close, cover"). Displaced native Middle English thecchen and bethecchen ("to cover") (from Old English þeccan, beþeccan ("to cover")), Middle English helen, (over)helen, (for)helen ("to cover, conceal") (from Old English helan ("to conceal, cover, hide")), Middle English wrien, (be)wreon ("to cover") (from Old English (be)wrēon ("to cover")), Middle English hodren, hothren ("to cover up") (from Low German hudren ("to cover up")).

According to the Oxford English Dictionary, the original sense of the verb and noun cover was "hide from view" as in its cognate covert. Except in the limited sense of "cover again," the word recover is unrelated and is cognate with recuperate. Cognate with Spanish cubrir ("to cover").

கவ்வு > கப்பு.

கவ்வு > covrir ( O.F ) > cooperio (L)> cubrir ( Spanish)

மேலை இந்தோ ஐரோப்பிய மொழிகளில் தமிழின் அவ்வு > கவ்வு உறவு கொண்டுள்ளதை சொல்லொற்றுமைத் தொடர்புகளைக் நன்குத் தெளிவாகும்.

சொல்லாக்கம் செய்ய விழையும் அன்பர்கட்கு வேர்ச்சொல் அறிவும் இழைந்திருப்பது இன்றியமையாதது ; சொல்லாக்கத்திற்கு மேலும் நுட்பத்தையும் ஒட்பத்தையும் செப்பத்தையும் சேர்ப்பதாகும்.

# ஆய்தம் – தனிநிலை ஏன்?

புலவர் வெற்றியழகன்
தலைவர், தொல்காப்பியர் தமிழ்ச் சங்கம்
சென்னை



முன்னுரை :

உலகத்தின் முதன்மொழி!
உலவுகின்ற
மொழிகளுக்கெல்லாம்
மூத்தமொழி!
உலக மொழிகளுக்கெல்லாம்
வேராக விளங்கும் மொழி!
உலக முதல் மாந்தனாகிய
தமிழனுக்கு உயிர்மொழி!
உயர்வான தமிழ்மொழி!

தமிழ்மொழிக்கு இலக்கண நூல் எழுதுவோருள் பெரும்பான்மையோர் உயிரெழுத்து, மெய்யெழுத்து என்று குறிப்பிட்டுவிட்டு, ஆய்த எழுத்து – இது – தனிநிலை என்றும்; ஆய்த எழுத்து உயிருடனும் சேராது; மெய்யுடனும் சேராது; அதனால், தனிநிலை என்று குறிப்பிட்டுள்ளனர்.

ஆய்த எழுத்து – உயிருடனும் சேரும்; மெய்யுடனும் சேரும்; உயிர்மெய்யாகவும் இயங்கும் என்பதனையும்; எவ்வாறெல்லாம் ஆய்தம் தனிநிலை பெறுகின்றது என்பதனையும்; நம் முன்னோர் பல்வேறு விதமான சிறப்புக் கருதியேதான் இதற்குத் தனிநிலை என்னும் பெயரைச் சூட்டியுள்ளனர் என்பதனையும் எடுத்துக்காட்டுவதே இந்தக் கட்டுரையினது நோக்கம்.

சான்றோர் கூற்று:

"ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன்
நுணுக்கம்"

(தொல்.சொல்.813)

"ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாஅய் என்னும் நான்கு சொல்லும், உள்ள ஒரு பொருளின் நுட்பத்தினை உணர்த்துவன" என்று ஒல்காப் புகழ் மிகுந்த தொல்காப்பியனார் கூறுகின்றார்.

"நலிபு வண்ணம் ஆய்தல் பயிலும்" – என்று தொல்காப்பியச் செய்யுளியல் 1479–ஆவது நூற்பா நலிபுவண்ணம் நுட்பமானது என்கிறது.

"ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்" என்று தொல்காப்பியர் கூறுகிறார். இசைமை என்று தொல்காப்பியர் கூறுவது ஆய்தத்திற்குத் தனியான ஒலி உண்டு என்பதனை விளக்குவதற்கேயாகும்.

ஆய்தத்திற்குத் தனியானதோர் ஒலி இருப்பதனாலேயே ஆய்தம் நெடுங்கணக்கில் தனித்து வைக்கப்பட்டிருக்கின்றது.

"ஆய்தம் அரை உயிர்; அரை மெய்யுமான (உயிர்மெய்யான) எழுத்து என்றும்; ஆய்தம் இலக்கண நூலோரின் புலமை நெறியிலான படைப்பு" என்றும் கால்டுவெல் தமது "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்னும் நூலில் கூறியுள்ளார்.

"தமிழிலுள்ள எழுத்துகளுள் குறைந்த – நுண்ணிய ஒலியமைந்த எழுத்து ஆய்தமாகும்" என்கிறார் முதுமுனைவர் இளங்குமரனார்.

ஆகையால், ஆய்தம் – நுட்பமான ஒலியினை உடையது. குறைவான ஒலியினை உடையது என்பதனை உணர்ந்து கொள்ளலாம்.

நெடுங்கணக்கில் – ஆய்தம் முதலாவதாகவும், அடுத்து இரண்டாவதாக மெய்யெழுத்தும், மூன்றாவதாக உயிர் எழுத்தும், நான்காவதாக உயிர்மெய்யெழுத்தும் என்னும் வைப்பு முறையில் அமைந்திருத்தல் வேண்டும். இவ்வாறு அல்லாமல் – உயிர் – மெய் – ஆய்தம் – உயிர்மெய் என்று அமைக்கப்பட்டிருப்பது பொருத்தமற்றதாகும்.

ஆய்த எழுத்துப் பல்வேறு வகையில் சிறப்பான எழுத்து என்றாலும் – நாம் – பார்க்கப்போவது – ஆய்த எழுத்து எந்தெந்த வகையில் அது தனிநிலை என்பதனை மட்டுமே.

### ஆய்தம் தனிநிலை ஏன்?

மெய்யெழுத்து – மெய்யெழுத்து, ஒற்றெழுத்து, புள்ளி எழுத்து என்று மூன்று பெயர்களைப் பெற்றுள்ளது. உயிரெழுத்து – உயிரெழுத்து என்னும் ஒரே பெயரைப் பெற்றுள்ளது; ஆனால், ஆய்த எழுத்து – 1. அஃகேனம், 2. கேடயம், 3. முப்புள்ளி, 4. முப்பாற்புள்ளி, 5. ஆய்தம், 6. ஒற்று, 7. புள்ளி, 8. புலுதம், 9. சார்பு, 10. நலிபு, 11. ஒன்று, 12. நுணுக்கம் (நுட்பம்), 13. தனிநிலை என்னும் பதின்மூன்று பெயர்களைக் கொண்டுள்ளது. அதனால் ஆய்தம் தனிநிலை.

உயிரெழுத்தினைப் போலச் சொல்லுக்கு முதலெழுத்தாக ஆய்தம் அமையாது; மெய்யெழுத்தினைப் போலச் சொல்லுக்கு இறுதி எழுத்தாகவும் அமையாது; சொல்லுக்கு இடையில் மட்டுமே அமையும். அதனாலும் ஆய்தம் தனிநிலை.

குறிப்பு: தொல்காப்பியத்துக்குப் பின்பும் நன்னூலுக்கு முன்பாகவும் எழுந்த "நேமிநாதம்" என்னும் இலக்கண நூல் – ஆய்தம் முதலெழுத்தாகவும் அமையும் என்கிறது. எடுத்துக்காட்டுத் தரவில்லை.

குறில் எழுத்தில் தொடங்கிக் குற்றியலுகரத்தில் முடிகின்ற மூன்று எழுத்துச் சொல்லில் இடையில் மட்டுமே ஆய்தம் அமையும். அதனாலும் ஆய்தம் தனிநிலை.

சில எழுத்துகள் வெளிப்படையாக ஒலிப்பன – அஃதாவது எடுத்தொலிப்பன; சில எழுத்துகள் மங்கும் ஒலியில் ஒலிப்பன – அஃதாவது படுத்தொலிப்பன. ஆனால், ஆய்த எழுத்து – எடுத்தும் படுத்தும் ஒலிப்பது. அதனாலும் ஆய்த எழுத்துத் தனிநிலை எனப் பெற்றது.

ஆய்த எழுத்து – தனித்து இயங்கும் மெய்யெழுத்தினைப் போல் – தனித்து இயங்குவதில்லை. தனித்து இயங்கும் உயிரெழுத்தினைப் போலவும் உயிர்மெய்யெழுத்தினைப் போலவும் தனித்து இயங்குவதில்லை. அதனாலும் ஆய்தம் தனிநிலை.

தமிழ் எழுத்துகளின் நெடுங்கணக்கில் – உயிரெழுத்தினுக்கும் மெயயெழுத்தினுக்கும் இடையில் வைக்கப்பெற்றிருக்கிறது. ஏன் எனில்? ஆய்தம் – மேலே அமைந்துள்ள உயிரெழுத்தாகவும் இயங்கக் கூடியது என்னும்; கீழே அமைந்துள்ள மெய்யெழுத்தாகவும் இயங்கக்கூடியது என்னும் நிலையினைக் குறிப்பாக உணர்த்தவே இவ்வாறு உயிர்க்கும் மெய்க்கும் இடையில் வைக்கப்பெற்றுள்ளது. அதனாலும் ஆய்தம் தனிநிலை. ஆய்தம், உயிராகவும் விளங்கும். மெய்யாகவும் விளங்கும் என்பதனை உணர்த்தவே இவ்வாறு அமைக்கப்பெற்றுள்ளது.

# விழிப்பு

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"விழியே விழியே உனக்கென்ன வேலை
விருந்துக்கு வரவா நாளைக்கு மாலை
தூது சொல்லடி மெதுவாக – நீ
தூது சொல்லடி மெதுவாக
இளம் தோள்களிலே அசைந்தாடட்டுமா
நெஞ்சை கேட்டுச் சொல்லடி சுவையாக
நெஞ்சை கேட்டுச் சொல்லடி சுவையாக"
(கண்ணதாசன், புதிய பூமி).

*****

"தமிழின் தொன்மையையும் முன்மையையும் அறியாத வரலாற்றாசிரியர், ஆரிய வேதக்காலத்தையே அடிப்படையாகக் கொண்டு தமிழ்நாட்டு வரலாற்றைத் தொடங்கும் தவறான வழக்கம் இன்னும் இருந்துவருகின்றது. தமிழ் வேத ஆரியத்திற்கு முந்தியதா யிருப்பதோடு வேதப் பெயர்களே தமிழ்ச்சொற்களின் திரிபாகவு மிருக்கின்றன.

வேதம் : விழித்தல் = பார்த்தல், காணுதல், அறிதல்.
விழி = அறிவு, ஓதி (ஞானம்).
"தேறார் விழியிலா மாந்தர்" (திருமந். 177)
விழி – L. vide – vise; Skt. vid – veda
ஒ.நோ: குழல் – குடல்; ஒடி – ஒசி."
(பாவாணர், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்).

வில் – விள் – விரி – விழி = இமை விரி.
விழித்தல் = இமை விரித்துப் பார்த்தல், இமை திறந்து பார்த்தல்.

விழி = விரித்து ஆராயும் அறிவு.

விழி = விரி, பரப்பு, வெளிப்படு, வெளிப்படை,
"மொழிப் பொருள் காரணம் விழிப்பத் தோன்றா"
(தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரிச்சொல் 98).
* விழிப்பத் தோன்றுதல் = விளங்கத் தோன்றுதல் (விளக்கமாகத் தெரிதல்).

விரியல் = பரப்பு (பிங்கல நிகண்டு), ஒளி (சூடாமணி நிகண்டு),

விள்(ளு)தல் = இதழ் விரிதல் = மலர்தல். (சூடாமணி நிகண்டு).

விள்ளுதல் – விரிதல் – பிரிதல்.
இமை விரிதல் = இமை பிரிதல்.
விள்ளுதல் – விள்கை = பிரிந்து நீங்குதல்.

விள்ளல் = பிரிவு,
"இன்னா செயினும் இனிய ஒழிகென்று
தன்னையே தான்நோவின் அல்லது –
துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல், கானக நாட!
விலங்கிற்கும் விள்ளல் அரிது."
(நாலடியார் 76).
கருத்து:கானக நாட!
ஒருவர் தனக்குத் துன்பம் செய்தாலும் அவருக்கு அது இன்பமாக விளையட்டும். அவர் தனக்குத் துன்பம் செய்யக் காரணமாக இருந்தோமே என்று தன்னைத் தானே நொந்துகொள்வது நட்பின் தன்மை. நெருக்கமாகக் கலந்து உறவாடியவரைக் கைவிடுதல் விலங்குகளிடத்தும் காணப்படுவதில்லை.

விள்ளாமை = நீங்காமை,
"கொள்கை கொளாமை இலாதான்
எள்கல் இராகம் இலாதான்

விள்கை விள்ளாமை விரும்பி
உள் கலந்தார்க்கு ஓர் அமுதே!"
(நாலாயிரத் தெய்வப் பனுவல் 2958).

விரியல் = மலர்ச்சி,
"மேதகு தாழை விரியல் வெண் தோட்டுக்
கோதை மாதவி சண்பகப் பொதும்பர்
தாது தேர்ந்து உண்டு மாதர் வாண் முகத்து"
(சிலப்பதிகாரம், புகார்க்காண்டம் 2: 17–19).

விரியல் = விடியல், கதிர் விரிந்து தோன்றும் காலைப்போது.
"புலர்ந்து விரி விடியல் எய்த விரும்பி"
(மதுரைக்காஞ்சி: 66).

"வான் கண் விரிந்த விடியல் ஏற்றெழுந்து"
(மலைபடுகடாம்: 257).

விழி = பார்; விழி = பார்த்தல்.
"கழிப் பெயர் களரில் போகிய மட மான்
விழிக் கண் பேதையொடு இனன் இரிந்து ஓடக்
காமர் நெஞ்சமொடு அகலா
தேடூஉ நின்ற இரலை ஏறே"
(நற்றிணை 242: 7–10).
உரை:  கழிநீர் பெருகிப் பரவுகின்ற களர்நிலத்தில் கால்வைத்த இளைய மான் கண்களை அகலவைத்துப் பார்க்கும. தன் அறியாக் குட்டியோடு தன் கூட்டத்தை விட்டு வெருண்டு ஓட, விருப்பங்கொண்ட நெஞ்சத்தோடு இருக்கின்ற இடத்தைவிட்டு அகலாமல் பார்வையாலேயே தேடி நிற்கும் ஆண்மானைப் பார்.

விழித்தல் = இமை விரித்துப் பார்த்தல்,
"விழித்தகண் வேல்கொண டெறிய அழித்திமைப்பின்
ஒட்டன்றோ வன்க ணவர்க்கு."
(திருக்குறள் 775).
மணக்குடவர் உரை:
மாற்றாரோடு எதிர்த்துச் சிவந்து நோக்கின கண்ணிலே ஒரு வேலினாலே எறிய, அதற்கு மீண்டும் இமைப்பாராயின் அஃது அஞ்சாதார்க்குக் கெட்டதனோடு ஒக்கும். விழித்தகண் என்பதற்கு மாற்றானை நோக்கி யிமையாத கண் எனினும் அமையும்.

விழித்தல் = தூக்கம் நீங்கிக் கண்விழித்தல்,
"துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து."
(திருக்குறள 1218).
பொழிப்பு: தூங்கும்போது கனவில் வந்து என் தோள்மேல் உள்ளவராகி, விழித்தெழும்போது உடனே விரைந்து என் நெஞ்சில் உள்ளவராகின்றார்.

"உறங்கு வதுபோலுஞ் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."
(திருக்குறள் 339).
மு.வரதராசன் விளக்கம்:
இறப்பு எனப்படுவது ஒருவனுக்குஉறக்கம் வருதலைப் போன்றது, பிறப்பு எனப்படுவது உறக்கம் நீங்கி விழித்துக் கொள்வதைப் போன்றது.

"பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றது
உண்மையின்"
(மணிமேகலை 16: 86–87).

விழி – விழிப்பு – விழிப்புணர்வு (awareness).

"எற்றே ஈது அதிசயம் ஈது அதிசயம் என்
இசைப்பேன் இச்சை எலாம் விடுத்து
வனத்திடத்தும் மலையிடத்தும்
உற்றே மெய்த் தவம் புரிவார் உன்னி
விழித்திருப்ப உலக விடயங்களையே
விலகவிட மாட்டேன்
கற்று ஏதும் அறியகிலேன் கடையரினும்
கடையேன் கருணை இலாக் கல்மனத்துக்

கள்வன் எனைக் கருதிச்
சற்றேயும் அன்று மிகப் பெரிது எனக்கு இங்கு
அளித்தான் தனித்த சிவகாமவல்லிக்கு
இனித்த நடத்தவனே."
(திருவருட்பா 5, 7, 3213).
* உன்னி விழித்திரு = எண்ணி விழிப்பாய்
இரு.

"பசித்திரு, தனித்திரு, விழித்திரு" –
வள்ளலார் அறிவுரை.
'மேற்படி நடந்தால் பதவி கிடைக்கும்' –
வாரியார் உரை.
ப(சித்திரு) த(னித்திரு) வி(ழித்திரு) = பதவி. .

"ஒண்டமிழ்த்தாய்ச் சிலம்படியின்
முன்னேற்றம் ஒவ்வொன்றும்
உன்முன் னேற்றம்!
கண்டறிவாய்! எழுந்திரு நீ!
இளந்தமிழா, கண்விழிப்பாய்!
இறந்தொ ழிந்த
பண்டை நலம் புதுப்புலமை
பழம்பெருமை அனைத்தையும்நீ
படைப்பாய்! இந்நாள்
தொண்டுசெய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித்தெழுந்தே!"
(பாவேந்தர்).

கண்விழிப்பாய் எனத் தட்டி எழுப்பினார்
பாவேந்தர்.
'தூங்காதே தம்பி தூங்காதே' என்றார்
பட்டுக்கோட்டையார்.

"காவிரிதனைச் சிறைமீட்டிட
ஓவறநினை உயிர்ப்பாய்இரு!
விழிப்பாய்இரு! பொறுப்பாய்இரு!
எழும்தீமையை வேரோடறு!"
(ஆ. அரிமாப்பாமகன், மருதப்பாட்டு 114: 17–
20).

விழி, விழித்தல் = பார்த்தல், கண்காணித்தல்.
விழிப்பு – விழிப்பாய் இருத்தல் –
கவனமாயிருத்தல் – vigil, vigilant, vigilance.

vigil என்பதற்கு விழி என்னும் சொல்
பொருண்மையடிப்படையில் பொருந்தி
இருப்பவும்,
ஆற்றல் எனும் பொருள்படும் 'vajah' என்ற
சங்கதச்சொல் வேராகலாம் எனக் கருதுவது
பொருந்தாது.
இஃது அவர் தமிழறியாமையினால் நேரும்
வினை!

விழி – vigil, vigilant.
vigilant (adj.)
late 15c., from French vigilant or directly from Latin vigilantem (nominative vigilans) "watchful, anxious, careful," present participle of vigilare "to watch, keep awake, not to sleep, be watchful," from vigil "watchful, awake" (from PIE root *weg- "to be strong, be lively"). Related: Vigilantly.

*weg-
Proto-Indo-European root meaning "to be strong, be lively."
It forms all or part of: awake; bewitch; bivouac; invigilate; reveille; surveillance; vedette; vegetable; velocity; vigil; vigilant; vigilante; vigor; waft; wait; wake (v.) "emerge or arise from sleep;" waken; watch; Wicca; wicked; witch.
It is the hypothetical source of/evidence for its existence is provided by: Sanskrit vajah "force, strength," vajayati "drives on;" Latin vigil "watchful, awake," vigere "be lively, thrive," velox "fast, lively," vegere "to enliven," vigor "liveliness, activity;" Old English wacan "to become awake," German wachen "to be awake," Gothic wakan "to watch."

# எள் நெய்



முனைவர் தி. பாலசுப்பிரமணியன்
பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்

வெப்பமண்டலப் பகுதியான தமிழ்நாட்டில் வளரும் ஒரு பழம்பெருமை கொண்ட பயிரி எள். தெற்கே ஆமணக்கு, மேற்கே தெங்கு, வடக்கே கடுகு போல எள் இம்மண்ணுக்குரிய எண்ணெய் வித்தாகும்.

எள் என்ற சொல் இள் =(சிறுமைப் பொருள்) என்ற சொல்லிலிருந்து வந்தது. (இள் > எள்). எள்ளல் – குறைவாக மதித்தல். எள் – மிகச் சிறிய கூல வகை.

மலை. – எள்ளு; கன். – எள், எள்ளு ; குட. எள்ளிது; துளு – எண்மெ; தெ. தெலிக நுவ்வுலு. நு+ நெய் = நுனெ.

எள்ளிலே பிறந்து எள்ளிலே வளர்ந்த இலவாணியன் மகளே! எள்ளுக்கும் சிறிய பூ என்ன பூ என்று வினா எழுப்பிய இளவரனுக்கு விடைகூறி அரசியான வரலாறு எள்ளுடன் தொடர்புடையது.

எள்ளின் வித்திலிருந்து பிழிந்து எடுக்கப்பட்ட நெய் எள்நெய் எனப்பட்டது. நாளடைவில் இது எண்ணெயாகிவிட்டது. காலப்போக்கில் எந்த வித்திலிருந்து நெய் பிழிந்தாலும் அது எண்ணெயாகிவிட்டது. எ.டு. தேங்காய் எண்ணெய்; இலுப்பை எண்ணெய்; ஆமணக்கு எண்ணெய்; கடலை எண்ணெய்; புங்க எண்ணெய்; வேப்ப எண்ணெய்.

இந்நிலையில் எள்நெய்யை ஏனைய நெய்களில் இருந்து பிரித்துக்காட்ட நல்லெண்ணெய் என்ற வழக்கு உருவானது.

சிறப்புப் பெயர் (எண்ணெய்) பொதுப்பெயரான நிலையில் இதற்கு மீண்டும் ஒரு தனிப்பெயர் உருவானது. உண்மையில் ஊட்டம் நிறைந்தது நல்லெண்ணெய். எத்தகைய குளிரிலும் ஏனைய எண்ணெய்களைப் போல் உறையும் தன்மை இல்லாதது இவ்வெண்ணெய். ஆதலால் இதன் கொழுப்பு குருதிநாளங்களில் படியாது. குருதி அழுத்தம், நாளக் குறுக்கம் ஏற்படுத்தாது. உ.வே. சா. ஏடு குறிப்பில் கூறும் ஒரு செய்தி,

புதுக்கோட்டை மன்னர் அவைக்கு வந்த கடுகு எண்ணெய்க்காரன் தன் வலிமைக்கு எதிராக எவர் உளர் என்று சவால் விட்டானாம். எவர் எவ்வளவு வலுவுள்ளவராக வந்தாலும் தூக்கி எறிந்துவிடுவானாம். அரசருக்குத் தன் நாடு சிறுமையடைவது போல் உணர, படைத்தலைவரை அழைத்து அவன் சவாலை ஏற்கச் சொன்னாராம். அவரும் மறுக்கவே, மனம் குழம்பிய மன்னர் கண்ணில், தொலைவில் நெல்மூட்டையொன்றைத் தலையில் சுமந்தபடி, தாம்பூலம் தரித்துக்கொண்டே நடப்பதை வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருந்தவன் ஒருவன் பட்டானாம். மன்னர் அவரை அழைத்து ஒரு பெரு நெல்மூட்டையைச் சுமந்து கொண்டுள்ளாயே! நீ வலிமை மிக்கவனாகத்தான் இருக்க வேண்டும். வடபுலத்திலிருந்து வந்து சவால்விடும் அவனை வெல்ல முடியுமா என்று வினவ, அவனும் சரி என்றானாம். அறிவிப்பு ஆணை முரசறிவிக்கப்பட்டது.

மிக்க திமிரில் இருந்தவனிடம் சென்ற நெல்மூட்டைக்காரர், சட்டென அவனை இறுக்கமாகப் பற்றி அவனைச் செயல்படவே விடவில்லையாம். சவால்விட்டவனோ தன் தோல்வியை ஒப்புக்கொண்டான். நாட்டின் மானம் காக்கப்பட்ட நிலையில் மகிழ்ந்த மன்னன், நெல்மூட்டைக்காரருக்கு உரிய வெகுமதியினை அளித்துவிட்டு, "நீ என்ன உணவு உண்கிறாய்?" என்று வினவினாராம். அவன் உடனே

"ஒன்றும் பெரிதாக இல்லீங்க.

வழக்கமாகச் சாப்பிடுவதைத்தான் நானும் சாப்பிடுகிறேன்" இந்த விடை மன்னருக்கு நிறைவளிக்கவில்லை. அதனை உணர்ந்த அந்த நெல்மூட்டைக்காரர், "நீங்கள் வேண்டுமானால் என் வீட்டிற்கு வந்து என்னுடன் உணவு உட்கொள்ளுங்கள்" என்றாராம். உடன்பட்ட மன்னர் அமைச்சருடன் சென்றாராம்.

இலை மூன்று போடப்பட்டது. அவர் மனைவி பானையில் இருந்த பழையதைத் தன் இரு கைகளால் பிழிந்து மூவருக்கும் பரிமாறினார். அடுத்து ஊற வைக்கப்பட்ட எள்ளை எடுத்து வைத்தார். விருந்தளித்தவர் ஊறிய எள்ளைத் தம் கையினால் பழையதின் மேல் பிழிந்து உண்டாராம். அரசராலும் அமைச்சராலும் அவ்வாறு பிழிந்து எடுத்து உண்ண முடியவில்லையாம்; வியந்து பார்த்தனராம். அதற்கு விருந்தளித்தவர் இதற்குக் "கைபிழி நெய் என்று பெயர், பழையதில் கைபிழி நெய்யிட்டு உண்ட கையின் வலிய பிடியிலிருந்து எவரும் நழுவமுடியாது" என்றாராம்.

இன்றும்கூட "பழையதில் நெய்போட்டு சாப்பிட்டால் உடல் வலுப்பெறும்" என்பர் பகடியாகப் பொருள்புரியாமல்.

உண்மையிலேயே நலம் கொண்ட இந்நெய்யால் உடலுக்கும் உள்ளுறுப்புகளுக்கும் ஊட்டமே தவிர ஊறு எள்ளளவும் இல்லை. எனவேதான் இதற்கு நல்லெண்ணெய் என்று பெயரிட்டனர் போலும்!. நாகப்பாம்பு நல்லபாம்பு என்று பெயர் பெற்றது ஒரு முரணாகும்.

எள் அடை, எள் பொடி, எள் துவையல், எள்ளுச்சோறு, எள் கருப்பட்டி இன்னுருண்டை எனப் பல வகைகளில் எள் இடம்பெறுகிறது.

"என்ன வேணும்?" எண்ணெய் வேணும்! என்ன எண்ணெய் வேணும்?. நல்ல எண்ணெய் வேணும்" என்ற வடிவேல் நகைசுவை மறக்க முடியாதது.

எண்ணெய்க் குளியல், எண்ணெய் காப்பு, எண்ணெய் வயல், எண்ணெய்க் கிணறு, எண்ணெய்க் குழாய், எண்ணெய் முழுக்கு, எண்ணெய் வடியும் முகம், எண்ணெய் வளநாடுகள், எண்ணெய்த் துணி, எண்ணெய் வணிகன், எண்ணெய்க் கடை, எரி எண்ணெய், கலப்பட எண்ணெய், சமையல் எண்ணெய் என எண்ணெயின் பரப்பு விரிந்துவிட்டது.

ஒப்புநோக்கல்

ஆங்கில ஆயில் (Oil) சொல்வரலாறும் ஈண்டு எண்ணத் தக்கதே!.

ஆலிவ் என்பது ஒருமரம். ஐரோப்பிய இடலை மரமாகும் இஃது. இது மேலை ஐரோப்பிய நாடுகளில் வளர்வது. இதன் தாவரவியல் பெயர் ஓலியா யூரோபியா. ஓலியம் என்றால் இலத்தீன் மொழியில் எண்ணெய் என்று பொருள். ஐரோப்பிய இடலை என்பது நடுநிலக் கடல் வடிவப்பகுதியில் வளரும் Olea europaea என்னும் தாவரவியல் மரமாகும்.

ஆங்கிலத்தில் ஆயில் (Oil) என்ற சொல் ஆலிவ் (Olive) என்ற விதையின் பிழிவே ஆகும். பின்னர் அனைத்து விதைகளில்இருந்துபிழிந்தெடுக்கப்பட்ட நெய்களுக்கானது. பெட்ரோ ஆயில் (Petro Oil – Petrolium) உட்பட. (Crude Oil, Palm Oil, Motor Oil, Hair Oil...)

ஒருவர் ஒருவரை காக்கா பிடிப்பதை ஆயில் அடித்தல் என்பர் அந்நாளில்.

Oil Paint, Oil Cake, Oil Cane, Oil Clock, Oiler, Oil field, Oil fish, Oil bird, Oil lamp, Oil gland, Oil man, Oil painting, Oil palm, Oil pan, Oil platform, Oil rig, Oil sand, Oil seed, Oil skin, Oil well என்றெல்லாம் ஆயிலை வைத்துச் சொற்கள் ஆங்கிலத்தில் ஏராளமாக உருவாகிவிட்டன.

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 151, 152 ஆவது கூட்டங்கள்!





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 151, 152–ஆவது கூட்டங்கள் முறையே 21.02.2024, 27.02.2024 ஆம் நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன. அந்தவகையில் அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 151–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், திரு. நா. சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். 151 ஆவது கூட்டத்தில் 217 தமிழ்க் கலைச் சொற்களுக்கும், 152 ஆவது கூட்டத்தில் 300 தமிழ்க் கலைச்சொற்களுக்கும் வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# பொதுமக்களிடம் தனித்தமிழ்க் கலைச்சொற்களை ஆட்சிமொழியாகக் கொண்டுசேர்ப்பதில் பதிவுத்துறையின் பங்கு முதன்மையானது! வல்லுநர்குழுக் கூட்டத்தில் அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் பேச்சு!




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறைவாரியாக வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு சொற்குவையில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன.

அந்தவகையில், 16.02.2024 ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககக் கூட்டரங்கில், பதிவுத்துறை வல்லுநர் குழுக் கூட்டம் நடைபெற்றது. "கலைச் சொல்லாக்கம்" எனும் பொருண்மையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் நோக்கவுரையாற்ற, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் தலைமையுரையாற்றினார். அப்போது, "பொதுமக்கள் அதிகம் தொடர்புகொள்ளும் அரசுத்துறைகளில் பதிவுத்துறையும் ஒன்று. பழங்கால வரலாறுகளைப் பதிவுகளாக, ஆவணங்களாகப் பாதுகாப்பது பதிவுத்துறை. ஆவணங்கள் வாயிலாகத் தான் அடுத்த தலைமுறையினர் வரலாறுகளை அறிந்துகொள்ளமுடியும். அப்படியிருக்கையில் ஆவணங்களை மண்ணின் மொழியாகிய தாய்மொழியில் பதிவதுதான் சிறப்பு. பிறமொழிகளில் பதிவுகளைச் செய்தால் அடுத்து வரும் தலைமுறையினரும், பிறநாட்டினரும் அந்தமொழிதான் இம்மண்ணின்மொழி என்று பிழையாக எண்ண வாய்ப்பு ஏற்படும். மேலும், ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கு உறுதுணையாக தமிழ்நாட்டில் ஆவணங்கள் தமிழில்தான் இருக்கவேண்டும் என்று அரசாணையின்படி அனைத்து ஆவணங்களையும்



தமிழில் பதிய வேண்டும். ஒருவேளை ஆங்கிலத்தில் பதிந்தால் அதற்கு இணையாகத் தமிழிலும் கட்டாயம் பதிய வேண்டும். பதிவுத்துறை சார்ந்த சொற்களுக்குப் பிறமொழிக் கலப்பில்லாத தனித்தமிழ்க் கலைச்சொற்கள் பயன்படுத்தப்பட்டால் அது பொதுமக்களிடம் எளிதாகச் சென்றடைந்து வழக்கத்திற்கு வரும். அதன் வாயிலாக எதிர்காலத் தலைமுறைக்கும் நற்றமிழ்ச் சொற்கள் கொண்டுசேர்க்கப்படும். இது தாய்த்தமிழுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையாகும். பதிவுத்துறை மட்டுமல்லாது எத்துறை சார்ந்த சொற்களாயினும் அவற்றிற்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களைச் சொற்குவை வலைத்தளத்தில் பெறமுடியும். எனவே சொற்குவை வலைத்தளத்தை அதிகம் பயன்படுத்துவதோடு, அதன் பயன்பாட்டை மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லவேண்டும்" என்று தெரிவித்தார். கூட்டத்தில் பங்கேற்ற பதிவுத்துறை வல்லுநர்களுக்கு அகரமுதலி இயக்கக வெளியீட்டு நூல்களை இயக்குநர் நினைவுப் பரிசாக வழங்கிச் சிறப்பித்தார். கூட்டத்தில், புதுக்கோட்டை பதிவு மாவட்டப் பதிவாளர் (நிருவாகம்) ஏ. பவானி, நாமக்கல் பதிவு மாவட்டப் பதிவாளர் (தணிக்கை) ஏ. சிவக்குமார், நாமக்கல் பதிவு மாவட்ட சார்பதிவாளர் கு.ப. அனிதாவேணி, கிருஷ்ணகிரி பதிவு மாவட்ட சார்பதிவாளர் ஞா. கார்த்திகேயன், அரியலூர் பதிவு மாவட்ட உதவியாளர் எ. தேவன், கன்னியாகுமரி பதிவு மாவட்ட உதவியாளர் கி.பிரபு, கடலூர் பதிவு மாவட்ட உதவியாளர் மா. ச. அறிவொளி, விழுப்புரம் பதிவு மாவட்ட இளநிலை உதவியாளர் வீ. பாலச்சந்திரன், வேலூர் பதிவு மாவட்ட உதவியாளர் ஏ. பாலமுருகன் ஆகியோர் கலந்துகொண்டு பதிவுத்துறை சார்ந்த 1100–க்கும் மேற்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினர். அப்போது, தமிழ்நாடு அரசு, அகரமுதலி இயக்ககம் வழியாகச் செயற்படுத்திவரும் இந்தத் தமிழ்க்காப்புப் பணிக்குத் தங்கள் துறைசார்ந்த அனைத்துப் பங்களிப்புகளையும் எப்போதும் வழங்குவோம் என்று தெரிவித்தனர். இயக்ககத் தொகுப்பாளர் திருமதி ஜெ. சாந்தி வரவேற்புரை வழங்க, முனைவர் வே. கார்த்திக் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார். நிறைவாக, இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன் நன்றி கூறினார்

# கரை சேர்த்த சுவடியியல் கலங்கரை விளக்கு தமிழ்த்தாத்தா!
# அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் புகழாரம்!





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் பட்டாபிராம், தருமமூர்த்தி இராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக்கல்லூரியில் "சொற்குவை மாணவத் தூதுவர்" பயிற்சித் திட்ட நிகழ்வு மற்றும் தமிழ்த்தாத்தா உ.வே.சா.வின் 169ஆவது பிறந்தநாள் விழாக் கருத்தரங்கம் 19.02.2024 ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது.

கல்லூரியிலுள்ள கண்ணன் அரங்கில் நடைபெற்ற நிகழ்வில், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ச. முருகேசன் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் க. கல்விக்கரசி தலைமையுரையாற்றினார்.



அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் கலந்துகொண்டு திட்டச் செயலாக்க உரையாற்றினார். அப்போது, "தமிழ்த்தாத்தா உ.வே.சா.வின் தமிழ்த்தொண்டு அளப்பரியது. அவர் தள்ளாத அகவையிலும் ஓய்வறியாது ஓலைச்சுவடிகளைத் தேடிக் கண்டறிந்து, உரையெழுதி, பதிப்பித்து வெளியிடவில்லையென்றால் இன்று பெரும்பாலான தமிழ் நூல்கள் நமக்குக் கிடைத்திருக்காது. தமிழர்களின் பண்பாடும் மரபும் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் புதைந்திருக்கின்றன. ஓலைச்சுவடிகளில் முடங்கிக்கிடந்த தமிழை, தேடிக்கண்டறிந்து, பதிப்பு மற்றும் உரைப்பணியால் தமிழை அடுத்தடுத்த தலைமுறையினரின் கைகளில் கரைசேர்த்தவர் தமிழ்த்தாத்தா. அவரால் நமக்குக் கிடைத்த அரிய நூல்களை இளைய தலைமுறையினர் ஆழ்ந்து கற்க வேண்டும். இந்துக்கள் கீதையையும், இசுலாமியர் திருக்குர்ஆனையும், கிறித்தவர்கள் பைபிளையும் மனமொன்றித் தொழுது படிப்பதைப்போல, இளைய தலைமுறைப் பிள்ளைகள் சங்க இலக்கியங்களையும், திருக்குறளையும் தொழுது படிக்க வேண்டும். மதிப்பெண்ணை நினைத்துப் படிக்காமல், வாழ்வியலை நெறிப்படுத்த உதவும் பாடங்கள் என்றெண்ணிப் படிக்க வேண்டும். தமிழானது சொல்வளம் நிறைந்த மொழி. அகரமுதலி இயக்ககச் சொற்குவை வலைத்தளத்தில் இதுவரை 15,26,621 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொல்லையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொல்லையும் சொற்குவை வலைத்தளத்தில் பார்த்துப் பயன்பெறமுடியும். அதனை மாணவர்கள் அதிகம் பயன்படுத்த வேண்டும், அதன் பயனைப் பரவலாக்கம் செய்ய வேண்டும்" என்று தெரிவித்தார்.



நிகழ்வில் அகரமுதலித் தொகுப்பாளர் வே. பிரபு திட்ட விளக்கவுரையாற்ற, பேராசிரியர்கள், மாணவர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவில் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் ச. கண்ணதாசன் நன்றியுரை கூறினார்.

# மொழிகாக்க இன்னுயிர் ஈந்த நடராசனார் மறைந்த சனவரி 15 ஆம் நாளை உலகத் தாய்மொழி நாளாக அறிவிப்பதற்கு யுனெசுகோவை உலகத் தமிழர்கள் வலியுறுத்த வேண்டும்!
# அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் வேண்டுகோள்!






தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில், "உலகத் தாய்மொழி நாள்" கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் அகரமுதலி மேனாள் இயக்குநர் முனைவர் கா.மு. சேகர், தமிழ்க் கலைக்கழக அலுவல்சார் – அலுவல் சாரா உறுப்பினர்கள், மற்றும் அகரமுதலி அலுவலர்கள், பணியாளர்கள்உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

கூட்டத்தில் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள்,

"தமிழுக்கும் அமுதென்று பேர் – அந்தத்

தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"

என்று தாய்த்தமிழை உயிராகப் போற்றிச்சொன்னார் பாவேந்தர் பாரதிதாசன். பாவேந்தர்க்கு மட்டுமல்ல, எந்த மொழியினராக இருந்தாலும் அவரவர்க்கும் அவரின் தாய்மொழி சிறப்புக்குரியது. காரணம், தாய்மொழி என்பது வெறும் கருத்துப் பரிமாற்ற கருவியல்ல ; அது உடலுடன் ஒட்டிப் பிறந்த உணர்வு. தாய்மொழிதான் ஒவ்வொருவரின் முதல் அடையாளமும் முகவரியும் ஆகும். தாய்மொழிவழிக் கல்வியில் சிறந்து விளங்கும் நாடுகள் அனைத்துத் துறையிலும் சிறந்தோங்குவதே தாய்மொழியின் வலிமைக்கான கண்கண்ட சான்று.

தன் உணர்விலும் உயர்விலும் இரண்டறக் கலந்திருக்கும் தாய் பற்றியும், தாய்மொழி பற்றியும் யாரேனும் பழித்தோ இழித்தோ பேசும்போது ஒவ்வொரு மாந்தனும் உணர்ச்சிவயப்படுவது இயற்கை. இ ழி ை வ ே ய பொறுத்துக்கொள்ளாதவர்கள் அழிவென்று வந்தால் அடங்கியா கிடப்பார்கள்? வீறுகொண்டு வெகுண்டெழுவார்கள். அப்படித்தான் 1938, 1965 ஆம் ஆண்டுகளில் தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பிற்கு எதிராகத் தமிழர்கள் கிளர்ந்தெழுந்து போராட்டம் நடத்தினார்கள். இப்போராட்டங்களில் தாய்த்தமிழின் உரிமை காக்க நடராசன், தாளமுத்து போன்ற என்ற ஈகியர் தம் இன்னுயிர் ஈந்தார்கள். இவர்களுள்ளும், மொழிகாப்பு ஈகியரான திரு. இல. நடராசனார், உலக அளவில் தன் தாய்மொழியைக் காக்க மரணமுற்றாலும் கவலையில்லை மன்னிப்புக் கடிதம் தரமாட்டேன். என் தாய்த்தமிழைக் காப்பாற்றாமல் ஓயமாட்டேன் என்று தாய்மொழி காப்புப் போராட்டத்தில் 1939 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 15 ஆம் நாள் தன் இன்னுயிரை முதலில் களப்பலியாக ஈந்தார்.



உண்மை வரலாறு இப்படியிருக்க, அதனைத் தமிழர்கள் உரிய காலத்தில் உரிய இடத்தில் கொண்டு பதிவு செய்யத் தவறிவிட்டனர். ஆனால், தமிழ்நாட்டில் நடைபெற்ற மொழிகாப்புப் போராட்டங்களுக்குப் பிறகு 14 ஆண்டுகள் கழித்து பாகிசுதானில் அதுபோன்றதொரு போராட்டம் நடைபெற்றது. பாகிசுதான் கிழக்கு – மேற்கு என இரு பிரிவாகப் பிரிந்தபோது, கிழக்குப் பாகிசுதானில் உருது மட்டுமே தேசிய மொழியாகத் திணிக்கப்பட்டதை எதிர்த்து, மேற்குப் பாகிசுதானில் 1952 ஆம் ஆண்டு பிப்பிரவரி 21 ஆம் நாள் நடைபெற்ற போராட்டத்தில் 4 மாணவர்கள் உயிர்நீத்ததனை நினைவுகூரும் வகையில் ஆண்டுதோறும் பிப்பிரவரி 21 ஆம் நாளை உலகத் தாய்மொழி நாளாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்று, வங்கதேச அறிஞர் இரபீக்குல் இசுலாம் 1998 ஆம் ஆண்டு யுனெசுகோவில் முன்மொழிந்தார். அதனை யுனெசுகோவும் 1999 ஆம் ஆண்டு ஏற்றதனைத் தொடர்ந்து 2000 ஆம் ஆண்டிலிருந்து பிப்பிரவரி 21 ஆம் நாள் உலகத் தாய்மொழி நாளாகக் கொண்டாடப்பட்டுவருகிறது.



வங்கமொழி இயக்கத்திற்கு முன்பே வண்டமிழ் மொழிகாக்க, வந்தமொழியாம் இந்தித் திணிப்பை எதிர்க்க நம் தமிழ்நாட்டில் நடைபெற்ற மொழி உரிமைக் காப்புப் போராட்டங்களை யுனெசுகோவின் கவனத்திற்குக் கொண்டுசென்று, தமிழர்களின் தாய்மொழி உணர்வை உலக அரங்கில் நிலைநாட்டும் வகையில், மொழிகாப்புப் போராட்டத்தில் முதல் களப்பலியான மொழி ஈகியர் திரு. இல. நடராசனார் மறைந்த சனவரி 15 ஆம் நாளை இனிவரும் காலங்களில் உலகத் தாய்மொழி நாளாகக் கடைப்பிடிப்பதற்கு ஆவன செய்யுமாறு வலியுறுத்த வேண்டும். அதனை இந்தநாளில் தமிழர்கள் அனைவரும் ஒன்றிணைந்து செய்வதற்கு உறுதியேற்க வேண்டும்.

ஏனென்றால் மொழிகாப்புப் போராட்டத்தில் மட்டும் தமிழர்கள் முன்னிற்கவில்லை; எண்ணிப்பார்த்தால் பல மொழிகளுக்கும் தமிழ்தான் முன்னிற்கிறது. அதனால்தான் மொழிஞாயிறு பாவாணர், தமிழ் ஆரியத்திற்கு மூலம் ; திராவிட மொழிகளின் தாய் என்றார். அதனால், "மற்றவர்கள் தங்கள் தாய்மொழியில் பேசுகிறார்கள். நாங்களோ மொழிகளின் தாய்மொழியில் பேசுகிறோம்" என்று தமிழர்கள் பெருமைகொள்ளலாம்.

"இவள் என்று பிறந்தனள் என்று அறியா

இயல்பினளாம் எங்கள் தாய்" என்று மகாகவி பாரதியார் பாரதத் தாய்க்குச் சொன்னது நம் பைந்தமிழ்த் தாய்க்கும் பொருந்தும். அத்தகு தொன்மைமிகு தாய்த்தமிழ் சொல்வளம் மிக்கது. "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்ற உயரிய இலக்கோடு, தாய்த்தமிழின் மேன்மைக்கான பல ஆக்கத் திட்டங்களைச் செயற்படுத்திவரும் தமிழ்நாடு அரசு, தமிழின் சொல்வளத்தைக் காப்பதற்காகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாகச் "சொற்குவை"யைச் செயற்படுத்திவருகிறது.

அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தில் இதுவரை 15,27,982 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இனி, மருத்துவம், பொறியியல் என எந்தத் துறை மாணவர்களாக இருந்தாலும் அவர்களுக்குத் தத்தம் துறைசார்ந்த பிறமொழிச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்கள் "சொற்குவை"யில் கிடைக்கும் என்ற நிலை ஏற்பட்டுள்ளது. புதிய வரவு சொற்களும் "சொற்குவை"யில் பதிவேற்றப்பட்டு வருகின்றன.வளமானதமிழ்வளர்ச்சிக்குப்பொற்குவையாகவிளங்கும்சொற்குவையைத் தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், அகராதியியலாளர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள், ஊடகத்தார், பொதுமக்கள் என அனைவரும் பயன்படுத்தி, அதன் பயன்பாட்டை மற்றவர்களுக்கும் கொண்டுசேர்ப்பதன் மூலம் அனைவரும் தாய்த்தமிழ்ப் பணியில் பங்கெடுக்க வேண்டும்.

காரணம், தாய்மொழி நம் அடையாளம். அடையாளம் என்றால் உடலில் உள்ள வடு அல்ல... அது நம் வாழ்வின் உயிர்.

அனைவருக்கும் உலகத் தாய்மொழி நாள் வாழ்த்துகள்" என்று தெரிவித்தார்.

# அகரமுதலி இயக்ககம் சார்பில் வல்லுநர்குழுக் கூட்டம்!
# தடயஅறிவியல் துறை வல்லுநர்கள் பங்கேற்பு!



தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், துறைவாரியாக வல்லுநர்குழுக் கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு, சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுவருகின்றன.

அந்தவகையில், 26.02.2024 ஆம் நாள், உள்துறை தடய அறிவியல் துறை வல்லுநர்குழுக் கூட்டம் நடைபெற்றது. தடய அறிவியல் துறைக் கூட்டரங்கில் நடைபெற்ற கூட்டத்தில், அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையுரையாற்றினார். அப்போது, "மறைந்திருக்கும் உண்மைகளைத் துல்லியமாகக் கண்டறிய தடய அறிவியல் துறை பயன்படுவதுபோல், காலச்சுழற்சியும் சிலரின் காழ்ப்புணர்ச்சியும் மறைத்து வைத்திருக்கும் தமிழ்மொழி – தமிழரின் உண்மையான தொன்மையையும் பெருமையையும் கலப்பில்லாத தூயதமிழ்ச் சொற்களைக் கொண்டு கண்டறியமுடியும். அரசுத் துறைகளில் புழங்கும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களைத் தொகுத்து, "சொற்குவை" வலைத்தளம் வழியாக மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருகிறோம். ஆட்சிமொழிச் செயலாக்கத்தின் இலக்கு நிறைவேற இது முகாமையான பணியாகும். அரசுத்துறையினர் மட்டுமின்றி அனைவரும் மொழிக் கலப்பின்றி அழகுத் தமிழில் பேசுவதும் எழுதுவதும் தான் மொழிக்கு நாம் செய்யும் முதன்மைத் தொண்டாகும்" என்று தெரிவித்தார். கூட்டத்தில் பங்கேற்ற தடய அறிவியல் துறை வல்லுநர்களுக்கு அகரமுதலி இயக்கக வெளியீட்டு நூல்களை வழங்கிச் சிறப்பித்தார்.

கூட்டத்தில், அகரமுதலி இயக்கக மேனாள் இயக்குநர் முனைவர் கோ. செழியன், உலகத் தமிழ்ச் சங்க மேனாள் இயக்குநர் முனைவர் ப. அன்புச் செழியன், மேனாள் துணை இயக்குநர் முனைவர் துரை. தம்புசாமி, தடய அறிவியல்துறையின் துப்பாக்கியியல் பிரிவு துணை இயக்குநர் தமிழ்த்திரு. ஸ்ரீவித்யா ஸ்ரீநிவாசன் ஆகியோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர். அகரமுதலித் தொகுப்பாளர் திருமதி ஜெ. சாந்தி வரவேற்புரை வழங்க, தடய அறிவியல் துறையைச் சார்ந்த இளநிலை அறிவியல் அலுவலர்கள் பகவதி, தமிழினி, விஜயலட்சுமி, சிலம்பரசன், முனைவர் நா. இளவரசு, சித்தாசாகுல்ஹமீது, மோகன், பாலாஜி, பிரகதீஷ், காளீஸ்வரன், பெரியசாமி, பாபுகுமார், இலட்சுமி நரசிம்மன், பாலச்சந்தர், முத்துலட்சுமி உள்ளிட்டோர் கலந்துகொண்டு, துறைசார்ந்த 612 தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினார்கள்.

# பக்தி இலக்கியங்களில் கலைச்சொற்கள் கொட்டிக்கிடக்கின்றன! எரிசக்தி மேம்பாட்டு முகமை வல்லுநர்குழுக் கூட்டத்தில் அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் பேச்சு!



தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், துறைவாரியாக வல்லுநர்குழுக் கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு, சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டு வருகின்றன.

அந்தவகையில், 27.02.2024 ஆம் நாள், எரிசக்தி மேம்பாட்டு முகமை வல்லுநர்குழுக் கூட்டம் அத்துறையின் கூட்டரங்கில் நடைபெற்றது. எரிசக்தி மேம்பாட்டு முகமையின் துணைப் பொதுமேலாளர் திருமதி இரா. சாந்தி வரவேற்புரை வழங்க, உலகத் தமிழ்ச் சங்க மேனாள் இயக்குநர் முனைவர் ப. அன்புச்செழியன், அண்ணா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை ஒன்றியத் தலைவர் பாவலர் தமிழ் இயலன், எரிசக்தி மேம்பாட்டு முகமை முதுநிலை மேலாளர் முனைவர் செ. பாலமுருகன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

கூட்டத்தில், அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையுரையாற்றினார். அப்போது, "தொன்மை மிகுந்த தமிழானது பண்பட்ட மொழி மட்டுமல்ல, அது பண்பை நம்முள் விதைக்கின்ற மொழியுமாகும். சொல்லுக்குள் நாகரிகத்தையும் பண்பாட்டுச் செறிவையும் பொதிந்து வைத்திருக்கின்ற மொழி நம் தமிழ்மொழி. எந்தவொரு சொல்லையும் இடம் பொருள் அறிந்து அதற்குத் தக்க உரைக்கும் ஆற்றல் தமிழ்மொழிக்கு உண்டு. அலகு என்றால் துடைப்பத்தையும் குறிக்கும். கோவில் சுற்றுப்புறங்களைத் துடைப்பத்தால் தூய்மை செய்வதைத்



திருவலகு பரிமாறல் என்றும், இறைவனுக்குப் படைக்கின்ற உணவைத் திருவமுது என்றும், திருவிழாக்களின்போது உற்சவர் வெளியில் வந்து அருள்பாலிப்பதைத் திருவீதி எழுந்தருள் என்றும் பக்தி இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. இச்சொற்களுக்குள் பண்பாடு மிளிர்வதை நாம் உணரமுடிகிறது. இவற்றைப் போன்று இன்னும் எத்தனையோ பண்பாட்டுச் செறிவுமிக்க பழந்தமிழ்க் கலைச்சொற்கள் பக்தி இலக்கியங்களெங்கும் கொட்டிக்கிடக்கின்றன. அவற்றைப் படித்தால் பக்தியோடு தமிழ்ப் பற்றும் வளரும். எந்தத் துறையானாலும் அதில் வழங்கும் பிறமொழிக் கலைச்சொற்களுக்குப் பொருத்தமான, நுட்பமான கலைச்சொற்களைத் தாய்தமிழில் வடிவமைத்து வழங்க முடியும். அப்படியான கலைச்சொற்களை நாம் அனைவரும் புழங்கும்போதுதான் பிறமொழிக் கலப்பைத் தவிர்க்க முடியும். அதற்காகத்தான் இதுபோன்ற வல்லுநர்குழுக் கூட்டங்கள் நடத்தப்படுகின்றன" என்று தெரிவித்தார். கூட்டத்தில் பங்கேற்ற எரிசக்தி மேம்பாட்டு முகமை வல்லுநர்களுக்கு அகரமுதலி இயக்கக வெளியீட்டு நூல்களை இயக்குநர் வழங்கிச் சிறப்பித்தார்.

கூட்டத்தில், அகரமுதலித் தொகுப்பாளர் திருமதி ஜெ. சாந்தி நோக்கவுரையாற்ற, பி. பாலகிருஷ்ணன், ந. கார்த்திகேயன், க. செல்வசுந்தரி, பா. சத்யபாமா, வெ. லதா, வே. சம்பத்குமார், இரா. பிரபாகரன், பு.மு. நரசிம்மன், மு. சுவாதி. ப. அறிவழகன், பா. சபரிசங்கர், ப. கவிதா, மோ. மதுரை, மா. தேவி, மதன்குமார், எஸ. சாந்தி. ஒ. கரமல்லயன், இரா. தேசாபிமானன், முனைவர் வ.ச.ஸ்ரீராஜபாலகுரு, புலவர் சு. மதியழகன். கவிஞர் ஆரிச், சிவ. சிவகுமார், அ.பீட்டர்ராசன், கோ. கிருஷ்ணமூர்த்தி, பாலாஜி, முனைவர் கா. பழனிச்சாமி உள்ளிட்டோர் கலந்துகொண்டு, துறைசார்ந்த 627 தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினார்கள். நிறைவாக. எரிசக்தி மேம்பாட்டு முகமை உதவி இயக்குநர் திருமதி அ. மகேஸ்வரி அவர்கள் நன்றியுரை கூறினார்.

## அதிகத்தூர், திருவள்ளூர் ஆஸ்ட்ரா குளோபல் பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கல்



## திருவள்ளூர் மாவட்டம் கடம்பத்தூர் ஒன்றியம் ஊராட்சி ஒன்றிய துவக்கப்பள்ளி கம்மவார்பாளையம் மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கல்



## திருவள்ளூர் மாவட்டம் , நகராட்சி தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கல்



# தொடக்கப் பள்ளியிலிருந்தே மாணவர்கள் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும் ! அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அறிவுறுத்தல்!





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், சென்னை, அடையாறில் அமைந்துள்ள அவ்வை தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கப்பட்டது. பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம்" நூல்களை வழங்கிப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "தமிழில் எல்லாம் காரணப்பெயர்தான். அரத்தம் என்பது குருதியைக் குறிக்கும் தூயதமிழ்ச் சொல். அரத்தி என்பது அரத்த வண்ணத்தில் இருக்கும் ஆப்பிளைக் குறிக்கும் தூயதமிழ்ச் சொல். ஜன்னலைக் குறிக்க சாளரம், இரஸ்க்கைக் குறிக்க வறளப்பம், பொக்கே என்பதைக் குறிக்க பூங்கொத்து என்பன போன்ற அழகிய – பொருள்நிறைந்த – காரணமுடன் கூடிய சொற்கள் தமிழில் நிறைந்துள்ளன. இந்த நூலில் 1 – 5 ஆம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப, அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் உள்ளன. அவற்றையெல்லாம் தொடக்கப்பள்ளியிலிருந்தே மாணவர்கள் நன்கு படித்து, வாழ்க்கையில் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும். அப்போதுதான் வருங்காலத்தில் மொழிக்கலப்பில்லாமல் பேசவும் எழுதவும் முடியும். தாய்மொழியின் மேம்பாடுதான் உண்மையான வளர்ச்சி என்றும், அதற்கு இளைய மாணவத் தலைமுறை உறுதுணை நிற்க வேண்டும்" என்றும் தெரிவித்தார். நிகழ்வில் அகரமுதலி தொகுப்பாளர் வே. பிரபு, பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி, ஓட்டுநர் வெ. சுதாகர் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்

# தாய்த்தமிழின் மேம்பாட்டை மாணவர்கள் முன்னெடுக்க வேண்டும்! அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் வலியுறுத்தல்!





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் சென்னை, திருவல்லிக்கேணி பகுதியில் அமைந்துள்ள பெருநகர சென்னை நடுநிலைப் பள்ளி மாணவர்களுக்கு 29.02.2024ஆம் நாள் முற்பகல் 10 மணியளவில் "நற்றமிழ் அறிவோம் என்னும் தூயதமிழ் அகராதி" வழங்கப்பட்டது. பள்ளி மாணவர்களுக்கு "நற்றமிழ் அறிவோம்" நூல்களை வழங்கிப் பேசிய அகரமுதலித் திட்ட இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் ஐயா அவர்கள், "நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருள்களை அழகிய தமிழில் அழைப்பதற்கான சொற்கள் அடங்கிய அகராதிதான் இந்த நற்றமிழ் அகராதி.ஒன்றாம் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப, அன்றாடம் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் இந்நூலில் உள்ளன. பள்ளிப் பருவத்திலிருந்தே பைந்தமிழ்ப் பற்றை வளர்த்துக்கொண்டால்தான் வருங்காலத்தில் மொழிக்கலப்பில்லாமல் பேசவும் எழுதவும் முடியும். எதிர்காலம் மாணவர்களின் கைகளில் இருப்பதால் தாய்த்தமிழின் மேம்பாட்டை அவர்கள்தான் முன்னெடுக்க வேண்டும்" என்று கூறினார். இந்நிகழ்வில் இயக்ககத் பதிப்பாசிரியர்கள் முனைவர் தி. பாலசுப்பிரமணியன், கி. தமிழ்மணி, ஒட்டுநர் வெ. சுதாகர் உள்ளிட்டோர் உடனிருந்தனர்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும் "

– தேசியக்கவி பாரதியார்

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 117–118 அமர்வுகள் 2024 பிப்பிரவரி 16, 23 ஆகிய நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 16.02.2024 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் ப. கமலரூபன்**
ஆராய்ச்சியாளர், இங்கிலாந்து





**திரு. க. பத்மானந்தன்**
மேனாள் செயற்றிட்டப் பணிப்பாளர்,
கல்வி அமைச்சு, இலங்கை

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பாரிசு





**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**
மாநிலத் தலைவர், தமிழ்மீட்சிப் பாசறை, போரூர்

## 23.02.2024 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம்
மலேசியா





**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**
மாநிலத் தலைவர், தமிழ்மீட்சிப் பாசறை, போரூர்

**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம், ஆங்காங்





**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர்,
கோயம்புத்தூர்

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பாரிசு



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**முனைவர் ப. கமலரூபன்**

Text Generation உரை உருவாக்கம்
Transformer Model - உருமாற்றிப் படிமம்
Swarm Intelligence – திரள் நுண்ணறிவு

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**

Delusionship மருட்கேண்மை
Candyceutical – இன்மருந்து
Taplexity – தரவுச்சிக்கல்

**திரு. க. பத்மானந்தன்**

Management முகாமைத்துவம்
Manager - முகாமையாளர்
Cheating Person – அளாப்பி

**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**

Extremism அதிவன்மையம்
Terrorism - பேரச்சவன்மையம்
Banian – மேலொட்டி

**திரு. இரா. திருமாவளவன்**

Clarinet தெள்ளாங்குழல்
Trumpet - துரும்பி / துரும்பூதல்
Marker Pen – குறிவுத் தூவல்

**முனைவர் மெய். சித்ரா**

fzeight எண்ணெட்டு / எட்டெட்டு
countervail – சமனீடு
cryonics – உறையுடலியல்

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**

Infograph தரவு வரைவி / தரவு வரைபடம்
Dexting – அறியா அரட்டை / பழகாப் பனுவல்
Shift Shock – பணிமாற்றதிர்வு

**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**

Foam Sleeve – நுரைப்பஞ்சுறை
Window Shutter – சாரளச் சுருளி
U Turn – வளரி வளைவு

# செய்தி நறுக்குகள்

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

**மாலை தமிழகம்**

Maalai Tamizhagam — Evening Tamil Daily

www.maalaitamizhagam.com e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 14-2-2024 புதன்கிழமை (மாசி 2) வெளியீடு Out Station 15-2-2024 Volume - 14 Issue -322 பக்கம் Pages 6 விலை Price ₹.3

India's No.1 English Evening Daily An Inspiring National Daily That Touches Your Heart EVENING TAMIL NADU

ஸ்ரீ விஜயலக்ஷ்மி டிராவல்ஸ் சென்னை சேலம் ஈரோடு போன்: 044-65499399 24797777

## 'சொற்குவை வலைத்தளத்தில் 15 லட்சத்து 26 ஆயிரம் புதிய சொற்கள் பதிவேற்றம் தமிழக அரசின் சாதனை!'

**கல்பாக்கம், பிப். 14-**



தமிழக முதல்வர் மு.க.ஸ்டாலின், தமிழ்மொழி வளர்ச்சியில் மிகுந்த அக்கறையுடன் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொண்டு வருகிறார். அந்த வகையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் இயக்குனர் கோ.விசயராகவன் மற்றும் துறை பணியாளர்கள், அனைத்து மாவட்டங்களுக்கும் நேரில்சென்று பள்ளிகல்லூரிகளில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம் குறித்தும், தூய தமிழில் பேசுதல், எழுதுதல் மற்றும் சொற்குவையைப் பயன்படுத்த வேண்டியும் மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர் மத்தியில் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி நடவடிக்கைகள் குறித்து பரப்புரை செய்து வருகின்றனர்.

அதன்படி, திருவள்ளூர் மாவட்டம், பூந்தமல்லி ஒன்றியம் முருக்கஞ்சேரி ஊராட்சி ஒன்றியத்துவக்கப் பள்ளி, அரண்வாயல் குப்பம் ஊராட்சி நடுநிலைப்பள்ளி, அரண்வாயல் ஊராட்சி தொடக்கப்பள்ளி மற்றும் எ.என்.எம்., தொடக்கப் பள்ளி ஆகிய நான்கு பள்ளி மாணவர்களுக்கு நேற்று (13ம் தேதி) 'நற்றமிழ் அறிவோம் என்னும் தூய தமிழ் அகராதி' நூல்களை அகரமுதலி இயக்கத்தின் தொகுப்பாளர் வே.பிரபு வழங்கினார்.

பின்னர் அவர் பேசுகையில், "மாணவர்களாகிய நீங்கள் வருங்காலங்களில் பொது வெளியிலும் உங்கள் இல்லத்திலும் மற்றும் நட்பு வட்டாரங்களிலும் ஆங்கிலம் கலக்காமல் தனித் தமிழில் மட்டுமே பேச வேண்டும். மாணவர்களுக்கு தொடக்கக் கல்வியிலேயே தமிழ்ப் பற்றை ஆசிரியர் புகட்ட வேண்டும். அப்பொழுது தான் மாணவர்கள் வருங்காலத்தில் மொழிக் கலப்பில்லாமல் பேசவும், எழுதவும் முடியும். நம் எண்ணத்தில் தோன்றும் அனைத்து செய்திகளையும் கருத்துக்களையும் மற்றவர்களுக்கு எடுத்துக் கூற நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியில் மட்டும் தான் முடியும். மற்ற மொழியில் எடுத்துக் கூற இயலாது. நம் அன்றாட வாழ்வில் தமிழில் அழைப்பதற்கான சொற்கள் அடங்கிய அகராதி தான் இந்த நற்றமிழ் அறிவோம் அகராதி. இந்த நூலில் 1 முதல் 5ம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு அவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப அன்றாடம் பயன் படுத்தும் பிற மொழிச் சொற்களுக்கு இணையான தூய தமிழ்ச் சொற்கள் உள்ளன.www.sorkuvai.com என்ற இணையத்தளத்தில் உள்ளது. அவற்றை அனைவரும் தவறாமல் படித்து பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்றார். மேலும், சொற்குவையின் வலைத்தளத்தில் 15 லட்சத்து 26 ஆயிரத்து 621 புதிய சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது. அதனைப் பயன்படுத்தும் முறை யைப் பற்றியும் தெரிவித்தார். இந்த நிகழ்ச்சியில் பள்ளி தலைமை ஆசிரியர்கள் தேவி. வாசுதேவன், சா.விந்தியா செல்வி. க.லலிதா மற்றும் ஆசிரியர்கள் பலர் கலந்து கொண்டனர். நிகழ்ச்சியில், மாணவர்கள் இனி தமிழில் மட்டுமே பேசுவோம் என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டனர்.

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam
Evening Tamil Daily
www.maalaitamizhagam.com
e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை / Chennai 20-2-2024 | செவ்வாய்க்கிழமை (மாசி 8) | வெளியூர் / Out Station 21-2-2024 | Volume - 14 Issue -328 | பக்கம் / Pages 6 | விலை / Price ₹.3

India's No.1
English Evening Daily
An Inspiring National Daily
That Touches Your Heart
EVENING TAMIL NADU

பர்வீன் டிராவல்ஸ்

# தமிழை அடுத்தடுத்த தலைமுறையினரின் கைகளில் கரை சேர்த்தவர் உ.வே.சா.,: விசயராகவன் புகழாரம்

**கல்பாக்கம், பிப். 20-**

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் பட்டாபிராம், தருமமூர்த்தி இராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக்கல்லூரியில் ‘சொற்குவை மாணவத் தூதுவர்’ பயிற்சித் திட்ட நிகழ்ச்சி மற்றும் தமிழ்த்தாத்தா உ.வே.சா.,வின் 169வது பிறந்த நாள் விழா கருத்தரங்கம் நேற்று (19ம் தேதி) சிறப்பாக நடைபெற்றது. கல்லூரி கண்ணன் அரங்கில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சியில், தமிழ்த்துறைத் தலைவர் முருகேசன் அனைவரையும் வரவேற்றார். கல்லூரி முதல்வர் கல்விக்கரசி தலைமையுரையாற்றினார்.



இதில், அகரமுதலி இயக்கக இயக்குனர் முனைவர் கோ.விசயராகவன் கலந்து கொண்டு திட்டச் செயலாக்கம் குறித்து உரையாற்றினார். அவர் பேசுகையில், ‘‘தமிழ்த்தாத்தா உ.வே.சா.,வின் தமிழ்த்தொண்டு அளப்பரியது. அவர் தள்ளாத அகவையிலும் ஓய்வறியாது ஓலைச்சுவடிகளைத் தேடிக் கண்டறிந்து, உரையெழுதி, பதிப்பித்து வெளியிடவில்லையென்றால் இன்று பெரும்பாலான தமிழ் நூல்கள் நமக்குக் கிடைத்திருக்காது. தமிழர்களின் பண்பாடும், மரபும் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் புதைந்திருக்கின்றன. ஓலைச்சுவடிகளில் முடங்கிக்கிடந்த தமிழை, தேடிக்கண்டறிந்து, பதிப்பு மற்றும் உரைப்பணியால் தமிழை அடுத்தடுத்த தலைமுறையினரின் கைகளில் கரைசேர்த்தவர் தமிழ்த்தாத்தா.அவரால் நமக்குக் கிடைத்த அரிய நூல்களை இளைய தலை முறையினர் ஆழ்ந்து கற்க வேண்டும். இந்துக்கள் கீதையையும், இசுலாமியர் திருக்குர்ஆனையும், கிறித்தவர்கள் பைபிளையும் மனமொன்றித் தொழுது படிப்பதைப்போல, இளைய தலை முறைப் பிள்ளைகள் சங்க இலக் கியங்களையும், திருக்குறளையும் தொழுது படிக்க வேண்டும். மதிப்பெண்ணை நினைத்துப் படிக்காமல், வாழ்வியலை நெறிப் படுத்த உதவும் பாடங்கள் என் றெண்ணிப் படிக்க வேண்டும். தமிழானது சொல் வளம் நிறைந்த மொழி. அகரமுதலி இயக்ககச் சொற்குவை வலைத்தளத்தில் இதுவரை 15 லட்சத்து, 26 ஆயிரத்து, 621 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொல்லையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொல்லையும் சொற்குவை வலைத்தளத்தில் பார்த்துப் பயன்பெறமுடியும். அதனை மாணவர்கள் அதிகம் பயன்படுத்த வேண்டும், அதன் பயனைப் பரவலாக்கம் செய்ய வேண்டும்,’’ என்றார். இந்த நிகழ்ச்சியில் அகரமுதலித் தொகுப்பாளர் வே.பிரபு திட்ட விளக்கவுரையாற்ற, பேராசிரியர்கள், மாணவர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவில் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் ச.கண்ணதாசன் நன்றி கூறினார்.

ஒரு புதிய அனுபவம்

தினகரன்

Dinakaran

ஓலைச்சுவடிகளில் முடங்கி கிடந்த

# தமிழை அடுத்தடுத்த தலைமுறையிடம் சேர்த்தவர் உ.வே.சா.

**அகரமுதலி திட்ட இயக்குநர் புகழாரம்**

திருவள்ளூர், பிப். 21: ஓலைச்சுவடிகளில் முடங்கிகிடந்த தமிழை அடுத்தடுத்த தலைமுறையிடம் சேர்த்தவர் தமிழ்த் தாத்தா உ.வே.சா. என்று அகரமுதலி திட்ட இயக்குநர் புகழ்ந்துள்ளார்.

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் பட்டாபிராம், தருமமூர்த்தி ராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக் கல்லூரியில் "சொற்குவை மாணவத் தூதுவர்" பயிற்சித் திட்ட நிகழ்வு மற்றும் தமிழ்த் தாத்தா உ.வே. சா.வின் 169வது பிறந்தநாள் விழாக் கருத்தரங்கம் நடைபெற்றது. இதில் கல்லூரி முதல்வர் கல்விக்கரசி தலைமை தாங்கினார். தமிழ்த்துறைத் தலைவர் முருகேசன் அனைவரையும் வரவேற்றார்.

நிகழ்ச்சியில் அகரமுதலி இயக்கக இயக்குநர் கோ.விசயராகவன் கலந்துகொண்டு திட்டச் செயலாக்க உரையாற்றினார். அப்போது அவர் பேசுகையில், "தமிழ்த்தாத்தா உ.வே. சா.வின் தமிழ்த்தொண்டு அளப்பரியது.

அவர் ஓய்வறியாது ஓலைச்சுவடிகளைத்தேடிக் கண்டறிந்து, உரையெழுதி, பதிப்பித்து வெளியிடவில்லையென்றால் இன்று பெரும்பாலான தமிழ் நூல்கள் நமக்குக் கிடைத்திருக்காது. தமிழர்களின் பண்பாடும், மரபும் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் புதைந்திருக்கின்றன. ஓலைச்சுவடிகளில் முடங்கிக்கிடந்த தமிழை, தேடிக் கண்டறிந்து, பதிப்பு மற்றும் உரைப்பணியால் தமிழை அடுத்தடுத்த தலைமுறையினரின் கைகளில் கரை சேர்த்தவர் தமிழ்த்தாத்தா. அவரால் நமக்குக் கிடைத்த அரிய நூல்களை இளைய தலைமுறையினர் ஆழ்ந்து கற்க வேண்டும்.

இந்துக்கள் கீதையையும், இசுலாமியர் திருக்குர்ஆனையும், கிறிஸ்தவர்கள் பைபிளையும் மனமொன்றித் தொழுது படிப்பதைப் போல, இளைய தலைமுறைப் பிள்ளைகள் சங்க இலக்கியங்களையும், திருக்குறளையும் தொழுது படிக்க வேண்டும். மதிப்பெண்ணை நினைத்துப் படிக்காமல், வாழ்வியலை நெறிப்படுத்த உதவும் பாடங்கள் என்றெண்ணிப் படிக்க வேண்டும். அகரமுதலி இயக்ககச் சொற்குவை வலைத்தளத்தில் இதுவரை 15,26,621 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொல்லையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச் சொல்லையும் சொற்குவை வலைத்தளத்தில் பார்த்துப் பயன்பெறமுடியும் என்றார். இதில் அகரமுதலித் தொகுப்பாளர் பிரபு திட்ட விளக்கவுரையாற்றினார். பேராசிரியர் கண்ணதாசன் நன்றி கூறினார்.

# செய்தி நறுக்குகள்

சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

தினமணி

வியாழக்கிழமை
22 பிப்ரவரி 2024
சென்னை
14 பக்கங்கள் ரூ.9

## தாய்மொழிதான் ஒவ்வொருவருக்கும் முகவரி

### அகரமுதலி இயக்குநர் கோ.விசயராகவன்

**சென்னை, பிப். 21:** தாய்மொழிதான் ஒவ்வொருவருக்கும் அவர்களது முகவரியாகத் திகழ்கிறது என அகரமுதலித் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன் கூறினார்.

தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் உலகத் தாய்மொழி நாள் கூட்டம் சென்னையில் புதன்கிழமை நடைபெற்றது. இந்தக் கூட்டத்துக்கு இயக்குநர் கோ.விசயராகவன் தலைமை வகித்துப் பேசியதாவது:

தாய்மொழி என்பது வெறும் கருத்துப் பரிமாற்ற கருவியல்ல; அது உடலுடன் ஒட்டிப் பிறந்த உணர்வு. தாய்மொழிதான் ஒவ்வொருவரின் முதல் அடையாளமும் முகவரியுமாகும். தாய்மொழிவழிக் கல்வியில் சிறந்து விளங்கும் நாடுகள் அனைத்துத் துறையிலும் சிறந்தோங்குவதே தாய்மொழியின் வலிமைக்கான கண்கண்ட சான்று.

மொழிகாப்புப் போராட்டத்தில் மட்டும் தமிழர்கள் முன்னிற்கவில்லை; எண்ணிப்பார்த்தால் பல மொழிகளுக்கும் தமிழ்தான் முன்னிற்கிறது. அதனால், மற்றவர்கள் தங்கள் தாய்மொழியில் பேசுகிறார்கள். நாம் மொழிகளின் தாய்மொழியில் பேசுகிறோம் என தமிழர்கள் பெருமை கொள்ளலாம்.

அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவை வலைதளத்தில் இதுவரை 15 லட்சத்து 27,982 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.

வளமான தமிழ்வளர்ச்சிக்குப் பொற்குவையாக விளங்கும் சொற்குவையைத் தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், அகராதியியலாளர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள், ஊடகத்தார், பொதுமக்கள் என அனைவரும் பயன்படுத்தி, அதன் பயன்பாட்டை மற்றவர்களுக்கும் கொண்டுசேர்ப்பதன் மூலம் அனைவரும் தாய்த்தமிழ்ப் பணியில் பங்கெடுக்க வேண்டும் என்றார் அவர்.

இதில் அகரமுதலி முன்னாள் இயக்குநர் முனைவர் கா.மு.சேகர், தமிழ்க் கலைக்கழக அலுவல்சார் - அலுவல் சாரா உறுப்பினர்கள், மற்றும் அகரமுதலி அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

# செய்தி நறுக்குகள்


இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam — Evening Tamil Daily

www.maalaitamizhagam.com — e-mail: maalaitamizhagam@gmail.com

• சென்னை • Chennai 19-2-2024 | திங்கட்கிழமை (மாசி 7) | வெளியூர் Out Station 20-2-2024 | Volume - 14 Issue -327 | பக்கம் Pages 6 | விலை Price ₹.3



India's No.1 English Evening Daily
An Inspiring National Daily That Touches Your Heart
EVENING TAMIL NADU

RATHIMEENA TRAVELS
We Are Honoured By Your Journey
T. MARIAPPAN
Cell No. 9994464671 9003143071
SRI BALAJI TRAVELS
Shop # 57, Omni Bus Stand, Koyambedu, Chennai - 107
50, 55 SEAT BUS AVAILABLE
MADURAI, VALLIYUR, TRIVANDRUM, VIRUDHUNAGAR, ERWADI, KANYAKUMARI, SATTUR, THAKALAI, KULASEKARAM, KOVILPATTI, NAGERCOIL, KUMBAKONAM, TIRUNELVELI, MARTHANDAM, NAGAPATTINAM, VELANKANNI, KARAIKAL, TANJORE


## 'பொதுமக்களிடம் தனித்தமிழ் கலைச்சொற்களை ஆட்சிமொழியாக கொண்டு சேர்ப்பதில் பதிவுத்துறையின் பங்கு முதன்மையானது!'

**கல் பாக்கம், பிப். 19-**



தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறைவாரியாக வல்லுனர் குழுக்கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு சொற்குவையில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன.

அந்தவகையில், கடந்த 16ம் தேதி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககக் கூட்டரங்கில், பதிவுத்துறை வல்லுனர் குழுக் கூட்டம் நடைபெற்றது. 'கலைச் சொல்லாக்கம்' எனும் பொருண்மையில் நடைபெற்ற இந்த கூட்டத்தில் பதிப்பாசிரியர் மா.பூங்குன்றன் நோக்கவுரையாற்றினார். இயக்ககத்தின் இயக்குனர் கோ.விசயராகவன் தலைமையுரையாற்றினார். அவர் பேசுகையில், "பொதுமக்கள் அதிகம் தொடர்பு கொள்ளும் அரசுத்துறைகளில் பதிவுத்துறையும் ஒன்று. பழங்கால வரலாறுகளைப் பதிவுகளாக, ஆவணங்களாகப் பாதுகாப்பது பதிவுத்துறை. ஆவணங்கள் வாயிலாகத்தான் அடுத்த தலைமுறையினர் வரலாறுகளை அறிந்துகொள்ள முடியும். அப்படியிருக்கையில் ஆவணங்களை மண்ணின் மொழியாகிய தாய்மொழியில் பதிவதுதான் சிறப்பு. பிறமொழிகளில் பதிவுகளைச் செய்தால் அடுத்து வரும் தலைமுறையினரும், பிறநாட்டினரும் அந்த மொழிதான் இம்மண்ணின்மொழி என்று பிழையாக எண்ண வாய்ப்பு ஏற்படும்.

மேலும், ஆட்சிமொழிச் செயலாக்கத்திற்கு உறுதுணையாக தமிழகத்தில் ஆவணங்கள் தமிழில்தான் இருக்க வேண்டும் என்று அரசாணையின்படி அனைத்து ஆவணங்களையும் தமிழில் பதிய வேண்டும். இது தாய்த்தமிழுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையாகும். பதிவுத்துறை மட்டுமல்லாது எத்துறை சார்ந்த சொற்களாயினும் அவற்றிற்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களைச் சொற்குவை வலைத்தளத்தில் பெறமுடியும். எனவே சொற்குவை வலைத்தளத்தை அதிகம் பயன்படுத்துவதோடு, அதன் பயன்பாட்டை மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லவேண்டும்," என்றார். கூட்டத்தில், புதுக்கோட்டை பதிவுமாவட்டப்பதிவாளர்(நிர்வாகம்) ஏ.பவானி, நாமக்கல்பதிவுமாவட்டப் பதிவாளர் (தணிக்கை) ஏ.சிவக்குமார், நாமக்கல் பதிவு மாவட்ட சார் பதிவாளர் கு.ப. அனிதாவேணி, கிருஷ்ணகிரி பதிவு மாவட்ட சார் பதிவாளர் ஞா.கார்த்திகேயன், அரியலூர் பதிவு மாவட்ட உதவியாளர் எ. தேவன், கன்னியாகுமரி பதிவு மாவட்ட உதவியாளர் கி.பிரபு, கடலூர் பதிவு மாவட்ட உதவியாளர் மா.ச.அறிவொளி, விழுப்புரம் பதிவு மாவட்ட இளநிலை உதவியாளர் வீ. பாலச்சந்திரன், வேலூர் பதிவு மாவட்ட உதவியாளர் ஏ. பாலமுருகன் ஆகியோர் கலந்துகொண்டு பதிவுத்துறை சார்ந்த 1,100க்கும் மேற்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினர்.

அப்போது, தமிழ்நாடு அரசு, அகரமுதலி இயக்க கம் வழியாகச் செயற்படுத்திவரும் இந்தத் தமிழ்க்காப்புப் பணிக்குத் தங்கள் துறைசார்ந்த அனைத்துப் பங்களிப்புகளையும் எப்போதும் வழங் குவோம் என்றும் தெரிவித்தனர். இயக்ககத் தொகுப்பாளர் ஜெ. சாந்தி வரவேற்புரை வழங்க, முனைவர் வே.கார்த்திக் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார். இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன் நன்றி கூறினார்.

## செய்தி நறுக்குகள்




ஒரு புதிய அனுபவம்

# தினகரன்

Dinakaran

www.dinakaran.com
/dinakarannews

துபாய் ஓபன் காலிறுதிக்கு முன்னேற்றம் பக்கம் 9



அரசியலை விட்டு என்னை விரட்ட முடியாது பக்கம் 3



இன்றைய இதழுடன் 16 பக்க ராசி பலன்கள் புத்தகம் இணைப்பு

●Madurai ●Thursday, 22-2-2024 ●Chennai ●Puduvai ●Vellore ●Salem ●Kovai ●Trichy ●Madurai ●Nellai ●Nagercoil ●Bengaluru ●Mumbai ●Delhi ●Volume 46 Issue 305 ●16 Pages ₹7


### மொழிகளின் தாய்மொழி தமிழால் பெருமை கொள்வோம்

# சொற்குவையில் 15.27 லட்சம் சொற்கள் பதிவேற்றம்

## தமிழக அரசின் திட்டங்களால் தனித்துவம் பெறும் தமிழ்

மதுரை, பிப். 22: சொற்குவையில் 15.27 லட்சம் தமிழ் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் பிப். 21ம் தேதி உலகத் தாய்மொழி தினமாக கடைபிடிக்கப்படுகிறது. நம் தாய்மொழியாம் தமிழின் மேன்மைக்காக பல்வேறு ஆக்கப்பூர்வமான திட்டங்களை தமிழ்நாடு அரசு செயல்படுத்தியுள்ளது. தமிழின் சொல்வளத்தை காக்க செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாக சொற்குவை என்ற வலைத்தளத்தை அரசு செயல்படுத்தி வருகிறது.

இந்த வலைத்தளத்தில் இதுவரை 15 லட்சத்து 27 ஆயிரத்து 982 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மருத்துவம், பொறியியல் என எத்துறை மாணவர்களும் அவர்கள் தங்களது துறை சார்ந்த பிறமொழிச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்கள் சொற்குவையில் குவிந்து கிடைக்கின்றன. அவற்றை பயன்படுத்தி வருகின்றனர். ஒவ்வொரு நாளும் புதிய சொற்களும் பதிவேற்றப்




பட்டு வருகின்றன. வளமான தமிழ் வளர்ச்சிக்கு பொற்குவையாக விளங்கும் சொற்குவையை தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், அகராதியியலாளர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள், பொதுமக்கள் என அனைத்து தரப்பினரும் பயன்படுத்தி இதன் பயன்பாட்டை மற்றவர்களுக்கும் கொண்டு சேர்த்து வருகின்றனர். இப்பணியில் மக்கள் அனைவரும் தன் இயல்பாக பங்கெடுத்து வருவது குறிப்பிடத்தக்கது.

இதுகுறித்து செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் கோ.விசயராகவன் கூறுகையில், "எந்த மொழியினராக இருந்தாலும் அவரவருக்கு அவரது தாய்மொழி சிறப்புக்குரியது. காரணம் தாய்மொழி என்பது வெறும் தகவல் பரிமாற்ற கருவியல்ல. அது உடலுடன் ஒட்டிப்பிறந்த உணர்வு. தாய்மொழி தான் ஒருவரின் முதல் அடையாளம். முகவரி. தாய்மொழி வழிக்கல்வியில் சிறந்து விளங்கும் நாடுகள் அனைத்து துறையிலும் சிறந்தோங்குவதே தாய்மொழியின் வலிமைக்கான சான்று. 1938, 1965 ஆகிய ஆண்டுகளில் தமிழ்நாட்டில் இந்தி திணிப்பிற்கு எதிராக தமிழர்கள் கிளர்ந்தெழுந்து போராட்டம் நடத்தினர். இப்போராட்டங்களில் தாய்த்தமிழின் உரிமை காக்க நடராசன், தாளமுத்து போன்றோர் தம் இன்னுயிரை தந்தார்கள்.

தமிழ் தாய்மொழியை காக்க இறந்தாலும் கவலையில்லை. தாய்த்தமிழை காப்பாற்றாமல் ஓயமாட்டேன் என்று கூறி தாய்மொழி காப்பு போராட்டத்தில் 1939, ஜனவரி 15ம் தேதி தன் இன்னுயிரை களப்பலியாக நடராசன் தந்தார். தமிழ்நாட்டில் நடைபெற்ற மொழிகாப்பு போராட்டங்களுக்குப் பிறகு 14 ஆண்டுகளுக்கு கழித்து வங்கதேச அறிஞர் இரபீக்குல் இசுலாம் 1998, பிப்ரவரி 21ம் நாளை உலகத் தாய்மொழி நாளாக கடைபிடிக்க வேண்டும் என்று யுனெஸ்கோவில் முன்மொழிந்தார். இதனை ஏற்று 2000ம் ஆண்டிலிருந்து பிப். 21ம் நாள் உலகத் தாய்மொழி நாளாக கடைபிடிக்கப்பட்டு வருகிறது. தமிழ் மொழி காக்க இன்னுயிர் தந்த நடராசனார் மறைந்த ஜனவரி 15ம் நாளை உலகத்தாய்மொழி நாளாக யுனெஸ்கோ அறிவிப்பதற்கு உலகத் தமிழர்கள் வலியுறுத்த வேண்டும். மொழிகாப்பு போராட்டங்களில் மட்டும் தமிழர்கள் முன் நிற்கவில்லை. எண்ணிப் பார்த்தால் பல மொழிகளுக்கும் தமிழ் தான் முன் நிற்கிறது. அதனால் தான் மொழிஞாயிறு பாவாணர், தமிழ், ஆரியத்திற்கு மூலம். திராவிட மொழிகளின் தாய் என்றார். அதனால், மற்றவர்கள் தங்கள் தாய்மொழியில் பேசுகிறார்கள். நாங்களோ மொழிகளின் தாய்மொழியில் பேசுகிறோம் என்று கூறி தமிழர்கள் பெருமை கொள்ளலாம்" என்றார்.

செய்தி நறுக்குகள்

சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

தினமணி

செவ்வாய்க்கிழமை
27 பிப்ரவரி 2024
சென்னை
18 பக்கங்கள் ரூ.9

# 612 கலைச் சொற்களை வழங்கிய தடய அறிவியல் துறை வல்லுநர்கள்

**சென்னை, பிப். 26:** அகரமுதலித் திட்ட இயக்ககத்துக்கு தடய அறிவியல் துறை சார்ந்த வல்லுநர்கள் சார்பில் 612 கலைச் சொற்கள் வழங்கப்பட்டன.

தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், துறை வாரியாக வல்லுநர்குழுக் கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு, சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுவருகின்றன. அந்த வகையில் தடய அறிவியல் துறை வல்லுநர்குழுக் கூட்டம் சென்னையில் திங்கள்கிழமை நடைபெற்றது.

கூட்டத்துக்கு அகரமுதலி இயக்குநர் கோ.விசயராகவன் தலைமை வகித்துப் பேசுகையில், ஆட்சி மொழிச் செயலாக்கத்தின் இலக்கு நிறைவேற இது முகமையான பணியாகும். அரசுத்துறையினர் மட்டுமின்றி அனைவரும் மொழிக் கலப்பின்றி அழகுத் தமிழில் பேசுவதும் எழுதுவதும் தான் மொழிக்கு நாம் செய்யும் முதன்மைத் தொண்டாகும் என்றார்.

இதையடுத்து தடய அறிவியல் துறையைச் சேர்ந்த இளநிலை அறிவியல் வல்லுநர்கள் தங்களது துறை சார்ந்த 612 தமிழ்க் கலைச் சொற்களை அகரமுதலி இயக்ககத்துக்கு வழங்கினர்.

இந்தக் கூட்டத்தில், அகரமுதலி இயக்கக முன்னாள் இயக்குநர் முனைவர் கோ. செழியன், உலகத் தமிழ்ச் சங்க முன்னாள் இயக்குநர் முனைவர் ப. அன்புச் செழியன், தடய அறிவியல்துறையின் துப்பாக்கியியல் பிரிவு துணை இயக்குநர் வித்யா ஸ்ரீநிவாசன், அகரமுதலித் தொகுப்பாளர் ஜெ.சாந்தி உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

# செய்தி நறுக்குகள்


இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

**மாலை தமிழகம்**

Maalai Tamizhagam — Evening Tamil Daily

www.maalaitamizhagam.com — e-mail: maalaitamizhagam@gmail.com



India's No.1 English Evening Daily
An Inspiring National Daily
That Touches Your Heart
EVENING TAMIL NADU

பர்வீன் டிராவல்ஸ்



சென்னை / Chennai 24-2-2024 சனிக்கிழமை (மாசி 12) வெளியூர் Out Station 25-2-2024 Volume - 14 Issue -332 பக்கம் Pages 8 விலை Price ₹.3


## மொழிகாக்க இன்னுயிர் ஈந்த நடராசனார் மறைந்த ஜன., 15ம் தேதியை உலகத் தாய்மொழி நாளாக அறிவிக்க வேண்டும்: கோ.விசயராகவன்

**கல்பாக்கம், பிப். 24-**

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித்துறை செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் இயக்குனர் கோ.விசயராகவன் வெளியிட்ட அறிக்கையில், 'தமிழுக்கும் அமுதென்று பேர் - அந்தத் தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்' என்று தாய்த்தமிழை உயிராகப் போற்றிச்சொன்னார் பாவேந்தர் பாரதிதாசன். பாவேந்தர்க்கு மட்டுமல்ல, எந்தமொழியினராக இருந்தாலும் அவரவர்க்கும் அவரின் தாய்மொழி சிறப்புக்குரியது. காரணம், தாய்மொழி என்பது வெறும் கருத்துப் பரிமாற்ற கருவியல்ல; அது உடலுடன் ஒட்டிப் பிறந்த உணர்வு.



தாய்மொழிதான் ஒவ்வொருவரின் முதல் அடையாளமும் முகவரியும் ஆகும். தாய்மொழி வழிக் கல்வியில் சிறந்து விளங்கும் நாடுகள் அனைத்துத் துறையிலும் சிறந்தோங்குவதே தாய்மொழியின் வலிமைக்கான கண்கண்ட சான்று. தன் உணர்விலும், உயர்விலும் இரண்டறக் கலந்திருக்கும் தாய் பற்றியும், தாய்மொழி பற்றியும் யாரேனும் பழித்தோ இழித்தோ பேசும் போது ஒவ்வொரு மாந்தனும் உணர்ச்சிவயப்படுவது இயற்கை. இழிவையே பொறுத்துக்கொள்ளாதவர்கள் அழிவென்று வந்தால் அடங்கியா கிடப்பார்கள்? வீறுகொண்டு வெகுண்டெழுவார்கள்.

அப்படித்தான் 1938, 1965ம் ஆண்டுகளில் தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பிற்கு எதிராகத் தமிழர்கள் கிளர்ந்தெழுந்து போராட்டம் நடத்தினர். இப்போராட்டங்களில் தாய்த்தமிழின் உரிமை காக்க நடராசன், தாளமுத்து போன்ற என்ற ஈகியர் தம் இன்னுயிர் ஈந்தார்கள். இவர்களுள்ளும், மொழிகாப்பு ஈகியரான இல. நடராசனார், உலக அளவில் தன் தாய்மொழியைக் காக்க ''மரணமுற்றாலும் கவலையில்லை மன்னிப்புக் கடிதம் தரமாட்டேன். என் தாய்த் தமிழைக் காப்பாற்றாமல் ஓய மாட்டேன்' என்று தாய்மொழி காப்புப் போராட்டத்தில் 1939ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 15ம் நாள் தன் இன்னுயிரை முதலில் களப்பலியாக ஈந்தார்.

உண்மை வரலாறு இப்படியிருக்க, அதனைத் தமிழர்கள் உரிய காலத்தில் உரிய இடத்தில் கொண்டு பதிவு செய்யத் தவறிவிட்டனர். ஆனால், தமிழ்நாட்டில் நடைபெற்ற மொழிகாப்புப் போராட்டங்களுக்குப் பிறகு 14 ஆண்டுகள் கழித்து பாகிஸ்தானில் அது போன்றதொரு போராட்டம் நடைபெற்றது. பாகிஸ்தான் கிழக்கு - மேற்கு என இரு பிரிவாகப் பிரிந்தபோது, கிழக்குப் பாகிசுதானில் உருது மட்டுமே தேசிய மொழியாகத் திணிக்கப்பட்டதை எதிர்த்து, மேற்குப் பாகிசுதானில் 1952, பிப்., 21ம் நாள் நடைபெற்ற போராட்டத்தில் 4 மாணவர்கள் உயிர்நீத்ததனை நினைவுகூரும் வகையில் ஆண்டுதோறும் பிப்., 21ம் நாளை உலகத் தாய்மொழி நாளாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்று, வங்கதேச அறிஞர் இரபீக்குல் இசுலாம் 1998ம் ஆண்டு யுனெசுகோவில் முன்மொழிந்தார்.

அதனை யுனெசுகோவும் 1999ம் ஆண்டு ஏற்றதனைத் தொடர்ந்து 2000ம் ஆண்டிலிருந்து பிப்., 21ம் தேதி உலகத் தாய்மொழி நாளாகக் கொண்டாடப்பட்டுவருகிறது. வங்க மொழி இயக்கத்திற்கு முன்பே வண்டமிழ் மொழிகாக்க, வந்தமொழியாம் இந்தித் திணிப்பை எதிர்க்க நம் தமிழ்நாட்டில் நடைபெற்ற மொழி உரிமைக் காப்புப் போராட்டங்களை யுனெசுகோவின் கவனத்திற்குக் கொண்டுசென்று, தமிழர்களின் தாய்மொழி உணர்வை உலக அரங்கில் நிலைநாட்டும் வகையில், மொழிகாப்புப் போராட்டத்தில் முதல் களப்பலியான மொழி ஈகியர் இல.நடராசனார் மறைந்த ஜனவரி 15ம் நாளை இனிவரும் காலங்களில் உலகத் தாய்மொழி நாளாகக் கடைப்பிடிப்பதற்கு ஆவன செய்யுமாறு வலியுறுத்த வேண்டும். அதனை இந்தநாளில் தமிழர்கள் அனைவரும் ஒன்றிணைந்து செய்வதற்கு உறுதியேற்க வேண்டும்' என, தெரிவித்துள்ளார்.